கணபதி துணை.

சேரர்பரம்பரையினராகிய

ஐயனாரிதனார்

அருளிச்செய்த

# புறப்பொருள்வெண்பாமாலை

## மூலமும் உரையும்.

இவை

பாலவநத்தம் ஜமீந்தாரவர்களாகிய

இராமநாதபுரம்

ம-ள-ள-ஸ்ரீ

பாண்டித்துரைத்தேவரவர்கள்

விருப்பத்தின்படி

கும்பகோணம் கவர்ன்மெண்ட் காலேஜ்

தமிழ்ப்பண்டிதராகிய

உத்தமதானபுரம்

வே. சாமிநாதையரால்

பலபிரதிரூபங்களைக்கொண்டு பரிசோதித்து

சென்னை:

வெ. நா. ஜூபிலி அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டன.

விலை ரூபாய் க,உ.

# இப்புத்தகத்திலடங்கியவை.

க. முகவுரை.

உ. அரும்பதவகராதி.

ங. இக்காலத்து அருகிவழங்குஞ்சொற்கள்.

ச. இலக்கணக்குறிப்பு.

ரு. புறப்பொருள்வெண்பாமாலை சூசீபத்திரம்.

சு. புறப்பொருள்வெண்பாமாலை மூலமும் உரையும்

எ. சூத்திர முதற்குறிப்பகராதி.

அ. துறையகராதி.

கூ. கொளுவின் முதற்குறிப்பகராதி.

கo. வெண்பாவின் முதற்குறிப்பகராதி.

கக. விஷய சூசிகை.

கஉ. இடம்விளங்கிய மேற்கோள்கள்.

கங. இடம்விளங்கா மேற்கோள்கள்.

கச பிழையும் திருத்தமும்.

கணபதி துணை.

# முகவுரை.

---

இந்நூலாசிரியர், சேரர்பரம்பரையிலுதித்த ஐயனாரிதனாரென்பவர்; இதற்கு முதனூல், ஆசிரியர்அகத்தியனார்மாணாக்கர் பன்னிருவராலும் அருளிச்செய்யப்பட்ட பன்னிருபடலமென்பது; இவை, "மன்னியசிறப்பின்" என்னும் இந்நூற்சிறப்புப் பாயிரத்தாலும், "மெய்யி னார்தமிழ் வெண்பா மாலையு, மைய னாரித னடர்ந்துரைத் தனவே" என்னும் இந்நூலின் இறுதிச் சூத்திரத்தாலும், 'பன்னிருபடலமுதனூலாக வழிநூல்செய்த வெண்பா மாலை ஐயனாரிதனாரும் இதுகூறினார்' என்று, தொல்காப்பிய பொருளதிகாரத்து மரபியலிலுள்ள "வினையினீங்கி" என்னும் சூத்திரத்திற்கு உச்சிமேற்புலவர்கொள் நச்சினார்க்கினியரெழுதிய விசேடவுரையாலும் உணரப்படும்.

இந்நூல், எழுத்துச்சொற்பொருள்யாப்புஅணியென்னும் தமிழிலக்கணமைந்தனுள், பொருளின் பகுதியாகிய அகம்புறமென்னுமிரண்டிற் புறத்தின் இலக்கணமாகிய சூத்திரங்களையும், அவற்றின் இலக்கியமாகிய வெண்பாக்களையும், அவ்வெண்பாக்களின்கருத்தைத் தனித்தனியேபுலப்படுத்தி ஒவ்வொன்றன்முன்னும் நிற்பனவாகிய கொளுக்களையுமுடையது; பன்னிருபடலத்தின் வழிநூலென்பதற்கேற்ப வெட்சிப்படலமுதற் பெருந்திணை படலமிறுதியாகவுள்ள பன்னிரண்டுபடலவுறுப்புக்களமைந்துள்ளது. [கொளு - கருத்து.]

மேற்கூறியபொருளின் பகுதியாகிய அகம் புறமென்னுமிரண்டனுள்:—

அகமாவது, ஒத்த அன்பினராகிய தலைவனும் தலைவியும் தம்முட்கூடுகின்றகாலத்துப்பிறந்து அக்கூட்டத்தின்பின்னர் அவ்விருவராலும் ஒருவருக்கொருவர் தாந்தம் முறுபயனை இவ்வாறிருந்ததெனக் கூறப்படாததாய் எப்பொழுதும் உள்ளந்துணர்வாலே அனுபவிக்கப்படும் இன்பம்; இன்பம்பற்றி அகத்தேநிகழும் ஒழுக்கத்தை அகமென்றது ஆகுபெயர் [அகம் - உள்.]

புறமாவது, மேற்கூறிய ஒத்தஅன்புடையார்தாமேயன்றி எல்லாராலும் அனுபவித்து உணரப்பட்டு இஃது இவ்வாறிருந்ததெனப் பிறர்க்கு:

கூறப்படுவதாய் அறனும்பொருளுமென்னும் இயல்பினையுடையதாய்ப் புறத்தே நிகழுமொழுக்கம்; அறனும்பொருளும்பற்றிப் புறத்தே நிகழும் ஒழுக்கத்தைப் புறமென்றது ஆகுபெயர். [புறம் - வெளி.]

புறத்தே அறனும்பொருளும்பற்றிநிகழும் ஒழுக்கமாகிய பொருளைப் புலப்படுத்தும் வெண்பாக்களின் வரிசையையுடையதாகலின், இந்நூல், புறப்பொருள்வெண்பாமாலையென்று பெயர்பெற்றது; [மாலை - வரிசை.] இது, வெண்பாமாலையெனவும் வழங்கப்படும். இதிலுள்ள வெண்பாக்களுட்பல, பரிமேலழகர்முதலிய பலருரைகளிலும் மேற்கோள்களாக எடுத்துக்காட்டப்பட்டும் உரைநடையாக எழுதப்பட்டு முள்ளன.

இதனால், பண்டைக்காலத்திருந்த அரசர் பகைவருடைய பசுக்களைக் கவர்தல்முதலிய யுத்தமுறையும், பிறவும் நன்குபுலப்படும். இதிற்கூறப்பட்ட யுத்தமுறைமுதலியவற்றிற்கும் தோல்காப்பியப்புறத்திணையியலிற் கூறப்பட்டுள்ளவற்றிற்கும் ஆங்காங்குச் சிற்சிலவேறுபாடுகள் காணப்படும். அங்ஙனம் காணப்படினும் 'சொன்முடிபும் பொருண்முடிபும் வேறுபடாமையின், மரபுநிலைதிரியாதன' என்று பெரியோர்கூறுவர்.

இந்நூலுறுப்புக்களாகிய பன்னிரண்டுபடலத்தும் முறையே அமைந்த வெட்சிமுதலியதிணைகளுள்,

௧. வெட்சித்திணையாவது :—பகைவருடைய பசுக்களைக் கவர்தல்; இதற்கு வெட்சிமாலைசூடுதல் உரித்து; இது வெட்சியரவமுதலிய பத்தொன்பது துறைகளையுடையது. இதனை அகத்திணைகளுள் ஒன்றாகிய குறிஞ்சியின்புறனென்பர் தோல்காப்பியர்.

௨. கரந்தைத்திணையாவது :—பகைவர்கவர்ந்த பசுக்களை மீட்டல்; இதற்குக் கரந்தைமாலைசூடுதல் உரித்து; இது கரந்தையரவமுதலியபதின்மூன்று துறைகளையுடையது; இது வெட்சித்திணைக்கு மறுதலைத்திணை; கரந்தையென்று ஒருதிணைகொள்ளாது நிரைமீட்டலை வெட்சித்திணையுள் அடக்குவர் தொல்காப்பியர்.

௩. வஞ்சித்திணையாவது :—பகைவருடையநாட்டைக்கொள்ளநினைந்து போர்செய்தற்கு அரசர்மேற்சேறல்; இதற்கு வஞ்சிமாலைசூடுதல் உரித்து. இது வஞ்சியரவமுதலிய இருபது துறைகளையுடையது; இதனை முல்லைத்திணையின்புறனென்பர் தொல்காப்பியர்.

௪. காஞ்சித்திணையாவது :—அங்ஙனம்போர்செய்தற்குவந்த பகைவர்க்கு எதிர்சென்றுஊன்றுதல்; இதற்குக் காஞ்சிமாலைசூடுதல் உரித்து; இது காஞ்சியெதிர்வுமுதலிய இருபத்தொரு துறைகளையுடையது; இது

வஞ்சித்திணைக்கு மறுதலைத்திணை. இதனை, "வஞ்சியுங் காஞ்சியுந் தம் முண் மாறே" என்னும் பன்னிருபடலச்சூத்திரத்தாலுணர்க. இத்திணை வீடுபேறுநிமித்தமாகப் பல்வேறுநிலையாமையைச் சான்றோர்சாற்றுங்குறிப்பினதென்றும், பெருந்திணையின்புறனென்றுங்கூறுவர் தொல்காப்பியர்.

ரு. நொச்சித்திணையாவது :—தம்மதிலைக்காத்தல்; இதற்கு நொச்சி மாலைசூடுதல் உரித்து; இது மறனுடைப்பாசிமுதலிய எட்டுத்துறைகளையுடையது; நொச்சியென ஒருதிணைகொள்ளாது, மதில்காத்தலை உழிஞைத் திணையுளடக்குவர் தொல்காப்பியர்.

சு. உழிஞைத்திணையாவது:—பகைவருடையமதிலை வளைத்துக்கொள்ளுதல்; இதற்கு உழிஞைமாலைசூடுதல் உரித்து; இது குடைநாட்கோள்முதலிய இருபத்தெட்டுத் துறைகளையுடையது. இதுவும் நொச்சித்திணையும் ஒன்றற்கொன்று மறுதலைத்திணை. இதனை மருதத்தின்புறனென்பர் தொல்காப்பியர்.

எ. தும்பைத்திணையாவது :—பகைவரோடு போர்செய்தல்; இதற்குத் தும்பைமாலைசூடுதல் உரித்து; இது தும்பையரவமுதலிய இருபத்து மூன்று துறைகளையுடையது. இதனை நெய்தற்றிணையின்புறனென்பர் தொல்காப்பியர்.

அ. வாகைத்திணையாவது :—பகைவனைவெல்லுதல்; இதற்கு வாகைமாலைசூடுதல் உரித்து; இது வாகையரவமுதலிய முப்பத்திரண்டு துறைகளையுடையது. அந்தணர்முதலிய நான்குவருணத்தோரும் அறிவரும் தாபதர்முதலியோரும் தம்முடையகூறுபாடுகளைமிகுத்தல் வாகைத்திணையென்றும், அது பாலைத்திணையின்புறனென்றுங்கூறுவர் தொல்காப்பியர்.

கூ. பாடாண்டிணையாவது :—ஒருவனுடைய கீர்த்தி வலி கொடை தண்ணளிமுதலியவற்றை ஆராய்ந்துசொல்லுதல்; இது வாயினிலைமுதலிய நாற்பத்தேழு துறைகளையுடையது; இதனைக் கைக்கிளைத்திணையின் புறனென்பர் தொல்காப்பியர். பாடாணென்பது, பாடுதல்வினையையும் பாடப்படும் ஆண்மகனையும் நோக்காது அவனது ஒழுகலாறாகியதிணையையுணர்த்தினமையின், வினைத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகையென்பர் நச்சினார்க்கினியர்.

க0. பொதுவியலாவது :—மேற்கூறியபுறத்திணைகட்கெல்லாம் பொதுவாயுள்ளனவும் அவற்றிற்கூறுதொழிந்தனவுமாகிய இலக்கணங்களைக் கூறுவது.

கைக்கிளைத்திணையாவது :— ஒருமருங்குபற்றிய கேண்மை; இஃது ஆண்பாற்கூற்று, பெண்பாற்கூற்று என இருவகைப்பட்டு ஒவ்வொன்றிலும் காட்சிமுதலிய துறைகளைப்பெற்றுவருவது. பிரமமுதலிய எண்வகைமணத்தினுள்ளே ஆசுரம் இராக்கதம் பைசாசம் என்னும் இம் மூன்றும் இதற்குரியனவென்பர் தொல்காப்பியர்.

கஉ. பெருந்திணையாவது :—பொருந்தாக்காமம்; இது வேட்கைமுந்துறுதல்முதலிய பலதுறைகளையுடையது. கைக்கிளைமுதலிய ஆறு திணைகளும் பிரமமுதலிய எண்வகைமணத்தினுள்ளே ஆசுரம் இராக்கதம் பைசாசம் காந்தருவமென்னும் நான்குமணங்களைப்பெறத் தானொன்றுமே பிரமம் பிராசாபத்தியம் ஆரிடம் தெய்வமென்னும் நான்குமணம்பெற்று நடத்தலான், எல்லாவற்றினும் பெரிதாகியதிணையென்று பொருட்காரணங் கூறுவர் நச்சினார்க்கினியர்.

மேற்கூறிய பன்னிரண்டுதிணைகளுள் வெட்சிமுதல் தும்பையீறாக வுள்ள ஏழும் புறமென்றும், வாகை பாடாண் பொதுவியலென்னுமூன்றும் புறப்புறமென்றும், கைக்கிளை பெருந்திணையென்னுமிரண்டும் அகப்புற மென்றுங்கூறப்படும்.

இதற்கு முதனூலாகிய பன்னிருபடலச்சூத்திரங்களுட்சில பழைய வுரைகளில் ஆங்காங்குக்காணப்படுகின்றனவேயன்றி, அந்நூல் முழுவதும் இக்காலத்து அகப்படாமையால் இதிலுள்ள சிலதிணைகளின் இலக்கண மும் துறைப்பெயர்கள் பலவற்றின் பொருட்காரணமும் நன்குபுலப்பட வில்லை. இந்நூலுரையாலும் அவை விளங்கவில்லை. ஆயினும், தொல் காப்பியப் புறத்திணையியற்கு உச்சிமேற்புலவர்கொள் நச்சினார்க்கினிய ரியற்றிய உரையால் அவற்றுட்பெரும்பாலன நன்குபுலப்படுகின்றன.

உரை, பதவுரையாகமட்டும் இருப்பதன்றிப் பெரும்பாலும் அங்ஙவ[illegible]த்து எழுதப்படவில்லை. பதவுரையின்பின் முடிபுகள் எழுதப்பட்டுள்ளன இலக்கணக்குறிப்பு முதலியன மிகுதியாகக்காணப்படவில்லை. ஆனாலும் இவ்வுரையில்லையாயின், இந்நூலின் அருமைபெருமைகளும் பாடல்களின் பொருள்களும் நன்குபுலப்படா.

இந்நூலுரையாசிரியர் இன்னாரென்பதும் அவர்காலமுதலியனவும் ஒருவாற்றானும் விளங்கவில்லை. உற்றுநோக்கின், இவ்வுரை மிகப்பழைய காலத்ததென்றுமட்டும் தெரிகின்றது.

உழிஞைப்படலத்தின் பின்னிற்றற்குரிய நொச்சிப்படலம், எல்லாப் பிரதிகளிலும் அதற்குமுன்பே காணப்பட்டமையால், அது அவ்வாறே

திப்பிக்கப்பட்டது. உரையிலுள்ள சிலமொழிகளை யான் அறிந்தபடியில் இக்காலத்து உலகவழக்கிலும் செய்யுள்வழக்கிலும் காணப்படாமையால் அதனைப் புலப்படுத்தவேண்டி அவற்றின் முதலிறுதிகளில் [ ] இவ்விரு நகரப்பகரங்கள் அமைக்கப்பட்டன. பின்னும், இந்நூலிலும் உரையிலும் விளங்காதவைகள் சிலவுள; அவை விளங்கியபின் இவற்றைப்பதிப்பிக்க விருப்பமிருந்தும், கிடைத்த கையெழுத்துப்பிரதிகளை உடையவர்களிடம் விரைவிற்சேர்ப்பிக்கநேர்ந்தமையால், இன்னும் இயன்றவரையில் ஆராய்ந்து மற்றொருசமயத்துப் பதிப்பிக்கலாமென்று எண்ணி ஒருவாறு பதிப்பித்தேன்.

இந்நூலின் பெருமையையும் எனது சிறுமையையும் நோக்காது இதனைப் பரிசோதித்தற்குப்புகுந்த குற்றத்தைப்பொறுத்தருளும்படி பெரியோர்களைப் பிரார்த்திக்கின்றேன்.

இதனைப் பரிசோதிக்கும்பொழுதும் பதிப்பிக்கும்பொழுதும் உடனிருந்து உதவிபுரிந்துவந்த சிவகங்கை ஸப் டிவிஷன் சிறுவயல் அரண்மனைவித்வானாகிய ம-ா-ா-ஸ்ரீ திரு. கிருஷ்ணையரவர்களையும், கும்பகோணம் நேடிவ் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதராகிய மணலூர் ம-ா-ா-ஸ்ரீ இராமானுஜாசாரியரவர்களையும் ஒருபொழுதும் மறவேன்.

தமிழ்நூல்கள் பலவற்றிலும் அமைந்துள்ள புறப்பொருளின் கூறுபாடுகளைத் தெரிந்துகோடற்குச் சிறந்தகருவியாகிய இந்நூலை இவ்வுரையுடன் பதிப்பித்தலில் எனக்குச் சிறிதும் பொருட்கவலையில்லாதவண்ணம், பாலவநத்தம் ஜமீந்தாரவர்களாகிய இராமநாதபுரம் ம-ா-ா-ஸ்ரீ பாண்டித்துரைத்தேவரவர்கள் பேருதவிபுரிந்தார்கள். அவர்களுடைய பெருந்தகைமையையும் அன்புடைமையையும் எப்பொழுதும் நினைத்திருத்தலையன்றி அவர்களுக்கு என்னாற்செய்யப்படும் கைம்மாறு யாதுளது?

"கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்னாற்றுங் கொல்லோ வுலகு."

இந்நூலைப்போலவே யான்பதிப்பிக்க எண்ணிய நூல்கள் ஒவ்வொன்றையும் எண்ணியவண்ணம் நிறைவேற்றுதற்பொருட்டும், பிரதியுதவி பொருளுதவி முதலியன புரிந்தோர் பெருவாழ்வடையும்பொருட்டும் திருவருள்சுரக்கும்படி, எல்லாம்வல்ல முழுமுதற்கடவுளாகிய இறைவனுடைய திருவடித்தாமரைகளைப் பிரார்த்திக்கின்றேன்.

## இந்நூற்பரிசோதனைக்குக்கிடைத்த கையெழுத்துப்பிரதிகள்.

---

திருக்கைலாயபரம்பரைத்
திருவாவடுதுறை ஆதீனத்துப் பிரதி - க.

மேற்படி ஆதீனத்து மஹாவித்வான்
மகா-௱-ஸ்ரீ மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள் ,, க.

திருந்துற்றலத்தைச்சார்ந்த
மேலகரம்
,, திரிகூடராசப்பக்கவிராயரவர்கள் ,, க.

திருநெல்வேலி
,, திருவம்பலத்தினமுதம்பிள்ளையவர்கள் ,, க.

ஆழ்வார்திருநகரி
,, தேவர்பிரான்கவிராயரவர்கள் ,, க.

திரிசிரபுரம்
,, அண்ணாஸாமிபிள்ளையவர்கள் ,, க.

திருக்கோணமலை
,, த. கனகசுந்தரம்பிள்ளையவர்கள் ,, உ.

ஆகப்பிரதி எ.

---

இங்ஙனம்,
வே. சாமிநாதையன்.

(1895)

உ

# அரும்பதவகராதி.

[இதிற்சில தொடர்மொழிகளுமுண்டு.]

ஒவ்வொருவரியிலும் பின்னுள்ள எண்கள், பக்கத்தைத் தெரிவிப்பன.

அகற்றும் - பெருக்கும், ௪௦௮.
அகையழல் - கொழுந்துவிட்டெரியும் நெருப்பு, ௧௧௫.
அசை - தூக்குதல், ௬௫.
அசைஇ - இளைப்பாறி, ௭.
அசைஇய - வைத்த, ௭.
அடர் - பொற்றகடு, ௩௦.
அடர்ந்து - நெருங்கி, ௫.
அடல் - வெற்றி, ௭௮.
அடி - செருப்பு, ௪.
அடிப்பட - வழிப்பட, ௫௬.
அடியிரட்டித்து - இட்டஅடியின்மேலே அடியிட்டு, ௧௫.
அடைகுறுவார் - கிட்டுதலைப்பெறுவார், ௨௩.
அண்ணல் - தலைமை, ௩௦.
அணங்க - ஆர்ப்ப, ௪௦௩.
அணங்கிய - பட்ட, ௬௩.
அணங்கு - பேய், ௭௩.
அணங்கும் - வருத்தும், ௮௨.
அணல் - கபோலம், பசுவின் அலைதாடி, ௭.
அம்பல் - புறங்கூற்று, ௧௩௩.
அமர்ந்தான் - மேற்கொண்டான், ௬௪.
அமலை - கூத்து, ௬௬.
அமையாக்காதல் - ஆராதஅன்பு, ௪௦௪.
அயர்ந்து - மறந்து, ௧௧௮.
அரற்றின்று - வாய்விட்டுப்புலம்பியது, ௧௩௧.
அரி - அழகு, ௬௨.
அரில் - பிணக்கு, ௪௧, ௧௧௨.
அலமந்து - அலம்வந்து, ௧௧௮.
அலந்து - நொந்து, ௨௧, ௧௧௩.
அலர்தல் - பணைத்தல், ௧௧௪.
அவ்வளை - அழகியவளை, ௧௧௩.
அவ்வாய் - அழகியவாய், ௧௨௬.
அவலம் - துயரம், ௧௪௩.
அவிதல் - இறத்தல், ௧௧௫.
அழல்விழியா - அழலாகநோக்கி, ௮௧.
அழிபடர்-மிக்குநடக்கும்விதனம், ௧௨௬.
அழிபு - அழித்து, ௨௮; அழிதல், ௨௨; தோல்வி, ௭௮; நொந்து, ௩௭.
அழுங்கல் - சத்தித்தல், ௧௨.
அழுவம் - காடு, ௧௧௬; நடு, ௭௦, ௪௦௭; போர், ௭௩.
அள்ளகடு - செறிந்தவயிறு, ௩௨.
அளகம் - பனிச்சை, ௧௫௪.
அளித்து - அளிக்கத்தக்கது, ௩௪.
அற்று - அற்றறுதிப்பட்டு, ௧௪௮.
அறைகூவுதல் - போர்செய்தற்கழைதல், ௩௨.
ஆடிய - தோய்ந்த, ௧௩௮.
ஆடு - அடுதல், ௩.
ஆடும் - உலாவும், ௧௩௨.
ஆய்ந்தமைத்தல் - ஆராய்ந்துமதித்தல், ௧௫௧.
ஆயும் - பலரும்கொண்டாடும், ௩௬.
ஆரமுதம் - நிறைந்த அமிர்தம், ௮௫.
ஆரெயில் - நிறைந்தவரண், ௩௩.
ஆலிப்ப - முழங்க, ௩௧.
ஆழித்தேர் - வட்டக்காலாற்சிறந்ததேர், ௨௦.
ஆள் - வீரன், ௧௫.
ஆளி - சிங்கம், ௧௧.
ஆற்றுப்படுத்தல் - வழிப்படுத்தல், ௩௭.
ஆறு - அமையாத, ௩௪.
இங்குலிகம் - சாதிலிங்கம், ௩௪.
இட்டுக்கொடுத்தல் - ஏற்றிக்கொடுத்தல், ௩.
இடங்கழி - இராகவேகம், ௧௩௫.
இடந்த - பிளந்த, ௩௬.
இடந்து - பெயர்த்து, ௪௩.
இடர் - மிடி, ௮௩.
இடை - இடையீடு, ௧௨௨.

இ[illegible]ந்த - தம்மில்இணையொத்த, ௧௨௦.
இதழ் - இமை, ௧௨௬.
இயக்கு - போக்கு, ௬௬.
இயங்காவிருள் - ஒருவரும் நடக்கத்தகாத இருள், ௧௮௫.
இய[illegible] - வர்ச்சியக்காரர், ௨௮.
இயைந்து - கூடி, ௧௧௧.
இரங்கல் - நெகிழ்தல்.
இரட்டி - கொட்டி, ௪௫.
இரப்பல் - வேண்டிக்கொள்வேன், ௧௩௪.
இரிந்தோட - கெட்டோட, ௧௮௧
இரிய - கெட, ௧௫, ௯௦.
இருவி - தினையரிதாள், ௩௨.
இருள் - மயக்கம், ௧௦௨, ௧௧௯.
இலங்கிழை - விட்டுவிளங்கும் ஆபரணம், ௧௪௧.
இலைவேல் - இலைத்தொழில்களாற்சிறந்த வேல், ௩.
இவர்தல் - பரத்தல், ௪௬, ௧௨௫.
இளி - ஓரிசை, ௯.
இளை - காவற்காடு, ௪௧.
இறகுளரும் - சிறகடிக்கொள்ளும், ௯௨.
இறுத்த - விட்ட, ௨௮.
இறுவரை - பெரியமலை, ௬௬.
இறை - முன்கை, ௧௩௦.
இன்தொடை - இனியகோவை, ௯௬.
இன்னம் - இத்தன்மையையுடையேம், ௨௧.
இன்னர் - இத்தன்மையார், ௨௩.
இன்னுந்திரங்கி - வெறுத்துவருந்தி, ௧௩௪.
இனவரையார் - தம்மிற்றுமொத்தவரையினையுடையார், ௧௦௧.
இனி - இப்பொழுது, ௧௦௫.
ஈடு - வலி, ௧௦௭.
ஈர்ந்தார் - ஈரத்தாற்சிறந்தமாலை, ௯௧.
உகும் - படும், ௧௦௮.
உட்குவர - அஞ்ச, ௧௩
உடற்றும் - வருத்தும், ௭௭.
உடன் - ஒக்க, ௧௧௫.
உடன்று - கோபித்து, ௬௩.
உடையும் - மலரும், ௧௩௪.
உண்கண் - மையுண்டகண், ௧௨௨.
உண்ணுவரகு - கவடி, ௫௪.
உணிய - தின்னவேண்டி, ௭.
உய்த்தன்று - கொடுத்தது, ௨௨.
உய்த்திட்டார் - செலுத்தியழுத்தினார், ௧௪௦.
உய்யாமை - ஒழியாமை, ௫௪.
உயங்கல் - வருந்தல், ௧௪௩.
உயரி - உயர்த்து, ௭௭; எடுத்து, ௨௦.
உரவுதல் - உலாவுதல், ௧௦௨.
உரவெரி - உலாவுமெரி, ௧௧௨.
உரு - அச்சம், ௧௩௧.
உருக - நெகிழ, ௧௦௩.
உருசெழு - அஞ்சுதல்பொருந்திய, ௧௩௯
உரை - கீர்த்தி, ௭௯.
உலத்தல் - இறத்தல், ௪௧௩.
உலாய் - இயங்கி, ௭௬; நிலைபெயர்ந்து ௬௦.
உலவை - தழை, ௭௬.
உழப்ப - பழக, ௧௪௨.
உழப்பு - முயற்சி, ௩௯.
உழலை - கணையம், ௧௫௧.
உளமை - உண்மை, ௧௧௯.
உளைசெரு - எடுப்புஞ்சாய்ப்புமான சண்டை, ௧௩.
உளர்ந்தார் - அசைந்தார், ௧௩.
உளர - அசைப்ப, ௧௨௦.
உளை - தலையாட்டம், ௨௨.
உளைத்தவர் - வெறுத்தவர், ௧௪௭.
உறும் - உறுதியுடைத்து, ௧௭.
உறை - கூடு, ௮௧; மழை, ௮௩.
உன்னம் - நிமித்தம்பார்க்குமரம், ௧௦௭.
ஊக்கம் - மனவெழுச்சி, ௧௦௮.
ஊடல் - வழக்காட்டி, ௧௦௫.
ஊடிய - வழக்காடிய, ௧௦௫.
ஊழ் - முறை, ௧௨௯.
ஊழி - உகம், ௧௪௨; நெடுங்காலம், ௧௨௪, யுகாந்தகாலம், ௫.
ஊறு - குற்றம், ௮௦.
எடுத்துரைத்தன்று - உயர்த்துச் சொல்லியது, ௧௬
எதிர்கொண்டு - ஏற்றுக்கொண்டு, ௯௭.
எதிர்ந்தன்று - ஏற்றிருந்தது, ௧௩௫.
எதிராது - ஏற்றுக்கொள்ளாது, ௫௭.
எதிரிய - ஏற்றுக்கொள்ள, ௩௩.
எந்தை - என்னுடையசாமி, ௧௧௩.
எய் - எய்ப்பன்றி, ௭௯.
எயிற்றி - மறத்தி, ௮.
எயிற்றியர் - வேட்டுவிச்சியர், ௭.
எருவை - கழுகு, ௩௫; பருந்து, ௯௨.
எல்லாக - விளக்கமுற, ௧௩௫.
எவ்வம் - மானம், ௧௩௧.
எவ்வையர் - எந்தங்கையர், ௧௩௭.
எழு - கணையம், ௪, ௬௪.
எழுதல் - கிளர்தல், ௧௯.
எழும் - மிகும், ௬௦.

ஏறிதல் - அழித்தல், ௬.
எறிந்தன்று - அழித்தது, ௬.
என்றும் - என்றுசொல்லுவேம், ௮௬.
என்னோரும் - எத்தன்மையையுடையோரும், ௮௭.
எஃகு - வாள், ௨௭.
ஏ - எய்யுந்தொழில், ௪௨.
ஏசல் - புல்லற்கூறல், ௧௩௭.
ஏதிலாளன் - அயலான், ௧௨௯.
ஏந்திழை - அழகிய ஆபரணம், ௩௯.
ஏந்துவாள் - உயர்ந்தவாள், ௮௧.
ஏமம் - காவல், ௧௦௫.
ஏமுற்று - ஏக்கமுற்று, ௧௪௪.
ஏய - ஏவின, ௪௧.
ஏழகம் - கிடாய், ௧௦௮.
ஏறு - யானை, ௫௩.
ஐ - வியப்பு, ௩.
ஐயர் - தமையன்மார், ௭௯.
ஐயவி - வெண்சிறுகடுகு, ௩௭.
ஒசிந்து - வணங்கி, ௧௨௦.
ஒலித்தல் - தழைத்தல், ௧௨௬.
ஒழிதல் - இறத்தல், ௧௪; மடிதல், ௬௯.
ஒழுக்கல் - நினைத்தல் ௧௧௦.
ஒளி - இசை, ௮௫.
ஒன்னப்போா-பொருந்தாதபோர், ௪௪.
ஒன்னுமூனையோர் - பொருத மன்னர், ௩௮.
ஓங்கிற்று - மேலேபறிந்தது, ௩௪.
ஓட்டி - கெடுத்து, ௮௭.
ஓதம் - அலை, ௨௦.
ஓம்பாவீகை-சீர்தூக்காதகொடை, ௮௫.
ஓம்பின்று - பரிகரித்தது, ௩௬.
ஓவா - ஒழியா, ௧௩௬.
கசிதல் - நெகிழ்தல், ௧௩௧.
கஞ்சுகம் - அட்டிமதூரம், ௧௫௧.
கட்சி - காடு, ௪.
கட்டுதல் - சுற்றுதல், ௬௨.
கீட்டூர் - பாசறை, ௭௬, ௧௨௧; விட்டிருக்கும்பாசறை, ௨௬
கடம் - காடு, ௧௧௨; பெறுமுறைமை, ௧௦.
கடவி - முடுக்கி, ௬.
கடன் - கொடுக்கக்கடவது, ௧௧௩; செய்தி, ௧௫௦.
கடிமுரசம் - காவன்முரசம், ௯௦.
கடுஞ்சுனையான் - மிக்க மடியினையுடைய பசு, ௧௦.
கடுத்து - முடுகி, ௭.
கடுவளா - செந்தூக்கானமலை, ௭.
கடைஇ - கடாவி, ௬௩; முடுக்கி, ௧௧௫.
கடைக்கணித்து - அணியிட்டு,
கடைக்கூடின்று - ஒருப்பட்டது, ௯௪.
கடைக்கொண்டு - கூட்டி, ௧௪.
கண்சிவத்தல் - கோபித்தல், ௧௩௭.
கணணுற்று - கண்டு, ௪௩௮; கிட்டி, ௧௩.
கண்பட - இடம்பரக்க, ௪௫௦.
கண்மாறுதல் - கண்மறுத்தல, ௧௪௮.
கணி - சோதிடவன், ௭௮.
கணிச்சி - குந்தாலி, ௧௦௦.
கணிவன் - சோதிடநூல்வல்லவன், ௭௮.
கதழ்தல் - விரைதல, ௩௬.
கந்து - கழியப்பாய்தல், ௧௫௩.
கயக்கல் - கலக்கல், ௯௮.
கயக்கிய - கலக்கிய, ௮௪.
கயற்கூடு - இணைக்கயல, ௧௪௪.
கருமை - வலிமை, ௮௦, ௮௧, ௯௪.
கருவரை - வலியமலை, ௧௨௪.
கருவிமாக்கள் - யாழையுடையபாணர், ௧௬.
கல்லாமறவர் - இயற்கையான மறத்தினையுடையார், ௩௨.
கலம் - மாக்கலம், ௧௫௦.
கலவேம் - மணவேம், ௧௩௬.
கலாவும் - கலக்கும், ௩௧.
கலி - மனவெழுச்சி, ௧௫௩; மிடி, ௧௫௦.
கல்லை - ஆரவாரம், ௧௩௭.
கவர - கொள்ளைகொள்ள, ௧௪.
கவலைமறுகு - கவர்த்ததெரு, ௭௬.
கவற்ற - வருத்த, ௯.
கவிகை - தியாகம், ௯௬.
கவைஇ - தழுவிக்கொண்டு, ௧௨௦.
கழகம் - சூது, ௧௫௪
கழியாமே - (வாளை) உறையினின்றும் வாங்காமே, ௮௮.
கழுது - பேய், ௧௨௦.
கழுமல் - கெழுமல், ௬௯.
கழூஇய - பொருந்திய, ௧௨௨.
களமர் - அடியார், ௨௫.
களரி - போர்க்களம், ௧௪.
களி - மதம், ௮௭, ௧௩௪.
கற்சிறை - கல்லாற்கட்டினகரை, ௨௬.
கற்புடைமை - ஒருமையுடைமை, ௯௮.
கறுவு - முனிவு, ௧௩௭.
கனை - செறிவு, ௯௫.
காட்சி - தரிசனம், ௧௧௯.
காட்டிய - காட்டுவான்வேண்டி, ௧௩௩.
காடு - சுடுகாடு, ௧௨௦.
காய்தல் - சீத்தல், ௬௮.
கார்த்துவனை - செவ்விக்குவளை, ௧௩௮.

காழகம் - முத்து, ௨௫.
காழ் - மணி, ௧௰.
காற்றி - காலப்பண்ணி, ௩௯.
காற்றும் - காக்கிசூம், ௮௮.
கிண்கிணி - சதங்கை, ௧௰௯.
கிணை - தடாரி, ௧௩.
கிணையன் - கிணைகொட்டுவோன், ௯
கிணைவன் - கிணைகொட்டுமவன், ௮௩
கிளர்தல் - கோபித்தல், ௧௩; பெருகுதல், ௯௨.
குடுமிகளைந்தான் - மயிர்ச்சிகையைக்கூட்டிமுடித்தான், ௬௩.
குந்தம் - கைச்சுவளம், ௧௧௫, சவளப்படை, ௬௧; வேல், ௩௨.
குய் - பொரிக்கறி, ௧௨௩.
குரம்பை - கூரை, ௧௨௩.
குரிசில - உபகாரி, ௮௨, ௮௭.
குலவுதல் - வளைதல், ௭.
குலாவுஞ்சிலை - ஏறிட்டவில், ௩௧.
குவளை - செங்கழுநீர், ௧௫௫.
குவைஇ - திரண்டு, ௧௨௭
குழூஉம் - திரளும், ௧௩.
குழைந்து - தளர்ந்து, ௧௩௯.
குளித்தல் - தைத்தல், ௬௭.
குறும்பு - அரண், ௬.
கூக்கேட்ப - ஏவல்கேட்ப, ௫௬.
கூட்டணங்கும் - பகைவர்திரளைவருத்தும், ௧௰௭.
கூட்டிய - தெரிந்துபறித்த, ௧௫.
கூட்டு - திறை, ௮௨; பொருள், ௨௫.
கூட்டுண்டான் - சிறிதும் ஒழியாமல் நுகர்ந்தான், ௧௦௫.
கூட்டுண்ணும் - இரண்டனுபவிக்கும், ௧௰௫; புணர்ந்துநுகரும், ௧௰௪.
கூம்பல் - துயிலல், ௧௪௩.
கூளி - பேய், ௧௧.
கூறு - பங்கு, ௮.
கெழும் - கிட்டி, ௨௩.
கேள் - கணவன், ௬௮.
கை - ஒழுக்கம், ௧௧௭; ௧௪௩. செயல் ௧௧௭.
கைம்மை - வைதவ்யம், ௧௧௩.
கையகலார் - அவ்விடத்துநின்றுநீங்கார், ௬.
கைவிடல் - நீங்கல், ௧௩௮.
கொங்கு - தாது, ௯௧; தேன், ௧௭, ௮௨.
கொட்கும் - சுழலும், ௩௬.
கொடி - ஒழுங்கு, ௧௦௦.
கொடியான் - கடுவினையாளன், ௧௧௫.
கொடுமை - வளைவு. ௩.
கொண்டல் - கொள்ளுதல், ௮௦.
கொதிப்பு - கனற்சி, ௮௧.
கொம்மை - குவிவு, ௧௨௭
கொய்தல் - பறித்தல், ௧௩௮.
கொய்தார் - கத்தரிகையால் மட்டஞ்செய்தமாலை, ௧௯; மட்டஞ்செய்தமாலை, ௮௧, ௧௨௨
கொய்யாக்குறிஞ்சி - குறிஞ்சிப்பண், ௩௭.
கொள் - குடைவேல், ௫௪.
கொள்ளைசாற்றி - கொள்ளையூட்டி, ௨௪.
கொளை - இசை, ௬௫.
கோடல் . காந்தள், ௭௬
கோதை - ஒருவகைமாலை, ௧௩௮.
கோல - அம்பு, ௩.
கோல்வளை - திரணடவளை, ௩௪, ௧௩௪.
சாடி - தாழி, ௩.
சாடு - சகடம், ௧௫௦.
சாவு - அமைதி, ௮௩.
சிலைத்து - கோபித்து, ௨௧.
சிலையா - பின்னிடாத, ௯.
சிறப்பு - செல்வம், ௩௪. தன்மை, ௯௪, நன்மை, ௧; ௬௨. மதிப்பு, ௪௧. மிகுதி, ௫௨. முறைமை, ௮௯.
சிறுதகை - நல்லோரிடத்துச்செய்யும் வணக்கம், ௪௰.
சிறை - கரை, ௧௪௫.
சினைஇ - கோபித்து, ௧௩.
சீர் - அழகு, ௧. நன்மை, ௨௧ மதிப்பு, ௬௩. மிக்கபுகழ், ௧.
சுட்ட - கருத, ௧௦.
சுடுமண் - செங்கல, ௫௨.
சுரம் - காடு, ௧௩, ௧௪௨. வழி, ௭.
சுவட்டவர் - குறூர்பூழாடிகள், ௪௫௩.
சுளிக்கும் - துளைக்கும், ௧௫௧.
சூட்டிஞ்சி - வளைகளையுடையமதில், ௫௧.
சூழ்தல் - தெரிதல், ௯௧.
சூழ்ந்து - விசாரித்து, ௫.
சூழி - நெற்றி, ௫௩.
செம்மல் - தலைமை, ௨௪.
செய் - தொழில், ௧௧௭.
செருமலைந்தார் - பூசலைச்செய்தார், ௧௩.
செருமுனை - பொருபடை, ௩௨.
செலவயர்தும் - செல்ல விரும்புவேம், ௧௪௯.
செலவழுங்கின்று - போக்கொழிந்தது, ௧௪௪.
செவ்வன் - செவ்விதாக, ௧௨௩.

சோகினம் - நிமித்தம், ௧௧௬, ௧௩௫.
சொல்லோர்த்தன்று - சொல்லைக் கேட்டது, ௪.
சோர்தல் - சொரிதல், ௧௪.
ஞரல - முழங்க, ௪௯.
ஞாயில் - ஏவறை, ௪௬. முடக்கறை, ௫௪ முடக்குக்கள், ௪௦.
தக்காங்கு - தக்கபடி, ௧௧௯. பொருந்தினபடி, ௮௦.
தகை - அழகு, ௭௧, ௧௧௨, ௧௩௪. மிகுதி, ௧௦௮.
தட்டி - கொட்டி, ௯௨.
தடாரி - கிணைப்பறை, ௯௬.
தடி - தசை, ௩௫.
தண்டா - கெடாத, ௧௦௩, ௧௨௭. தணியாத, ௮
தண்டி - மிகைத்தெழுந்து, ௧௯.
தண்ணடை - மருதநிலம், ௧௭, ௨௪.
தணியா - தீரா, ௧௧௬.
தமர் - தம்முடைய சுற்றத்தார், ௨௧.
தயங்குதல் - அசைதல், ௧௩௯,
தரிய - தரும்பொருட்டு, ௯௮.
தலை - ஒப்பு, ௩௪.
தலைக்கொண்ட - கைப்பற்றின, ௪௨
தலைக்கொண்டார் - கிட்டினார், ௧௫.
தலைக்கொண்டான் - பட்டான், ௧௬.
தலையளித்தன்று - தண்ணளி செய்தது, ௧௭.
தலைவரும் - மேல்வரும், ௮௩.
தவழ்தல் - தத்துதல், ௭௪.
தவழ்திரை - ஊர்ந்திரை, ௮௦.
தளரியல் - நுடங்குந்தன்மையினையுடையவள், ௧௦௩.
தளைபரிதல் - எல்லைகடத்தல், ௧௪௪.
தறுகண்மை - மறப்பண்பு, ௨௬.
தன்னை - தன்னுடையசுவாமி, ௮.
தா - வலி, ௧௬.
தாங்கி - தடுத்து, ௩௪.
தாங்குதல் - தடுத்தல், ௩௨.
தாட்டாழ்தடக்கை - தாளிலேயுறத்தாழ்ந்த பெரியகை, ௯௧.
தாது - பூ, ௧௪௨.
தாய - பரந்த, ௮௧.
தார் - ஒருவகைமாலை, ௧௩௮; கொடிப்படை, ௧௧௭; கொத்து, ௧௨; கோவைமாலை, ௫௫, ௬௦; தூசிப்படை, ௨௧, ௩௪.
தாழ்புயல் - கால்விழுந்தமேகம், ௯௧.
தாள் - தாழ், ௯௪.
தானை - புடைவை, ௧௪௦.
திணிதல் - செறிதல், ௧௭.
திரிகோடு - புரிந்தகொம்பு, ௪௫௧; வளைந்தகொம்பு, ௧௨௧.
திரித்து - திருப்பி, ௧௫.
திரிவு - தப்பு, ௭௮.
திளைப்ப - அசைப்ப, ௧௧.
தீது - பொல்லாது, ௧௪௮.
தீந்தேறல் - தித்தித்தமது, ௧௦.
தீந்தொடையாழ் - தித்தித்தகோவையினையுடையயாழ், ௧௫௪.
துடி - பறை, ௧௦௯.
துயல - அசைய, ௧௧௧.
துயலல் - சாலல், ௩௬.
துயில் - மரணம், ௩௭.
துரத்தல் - எறிதல், ௯௦.
துரந்த - எறிந்த, ௮௩
துவலை - சிறுதுளி, ௭௬
துற்று - உணவு, ௧௧௯.
தூ - தசை, ௧௨௩.
தூக்கு - இசை, ௧௫௪; ௧௫௫
தூங்குதல் - தங்குதல்.
தூங்கிடையாடின்று - தூதாகிநடந்தது. ௧௪௨.
தூதொடுவந்தேன் - தூதாகிவந்தேன் ௧௪௨.
தேரிதல் - விசாரித்தல், ௧௩௯.
தெளி - தெளிவு, ௯
தெளிதல் - தேறல், ௧௪௪.
தெறுகுவர் - அழிப்பர், ௨௨.
தேசு - பெருமை, ௧௯.
தேறல் - மதுத்தெளிவு, ௩.
தையன்முதுகுரம்பை - அழிந்தபழங்கூரை, ௧௨௩
தொட்டு - கட்டி, ௮.
தொடர - வினவ, ௧௩௨.
தொடுகழல் - கட்டுங்கழல், ௪௦, ௮௮.
தொடை - கட்டு, ௧௦௬. கோவை, ௯௬.
தொழூ - கட்சாடியிருக்குமேணி, ௪.
தோட்டி - காவல், ௫௩.
தோடு - தொகுதி, ௫௨.
தோணி - ஒருமரத்தோணி, ௫௧.
தோல் - கிடுகு, ௪௯.
நகர் - மாளிகை, ௧௨௪.
நகும் - பாடாநிற்கும், ௨௦.
நடப்ப - பரப்ப, ௬.
நடுநாள் - ஒத்தயாமம், ௧௩௫.
நடை - செலவு, ௧௫௪.
நடைத்தேர் - சிறுதேர், ௨௨.

நமர் - உறவுமுறையார், கரு௦.
நயந்தன்று - நயந்தது, அரு.
நயப்பு - ஆசைப்பாடு, க௨க.
நயவரும் - நன்மைவரும், கருக.
நரலும் - ஒலிக்கும், சு.
நலிதல் - நெருக்கல், கருக.
நலிவு - நெருக்குதல், ௨௨.
நவிலுதல் - பழகுதல், க௨க.
நள்ளிருள் - செறிந்தவிருள், கருக; நடு விருள், ரு.
நளி - பெருமை, க௨௨.
நறை - நறுநாற்றம், கள.
நன்பகல - உச்சிப்பொழுது, ௪௦.
நாட்கொண்டன்று புறவீடு விட்டது, ௨௦.
நாவாய் - ஓடம், ருக
நிமிரின் - நடப்பின, சு௦.
நிலவுதல - மன்னுதல், அரு.
நிலை - நிற்றல், கருச.
நிற்கு - நிற்பேன், கச௦.
நிறம - மாாபு, கரு மேனி, அசு.
நீட்டின்று - கொடுத்தது, ௨ரு.
நீந்தின - மிதந்தன, கருசு.
நுழை - நுண்மை, ககக.
நூழில்-ஒருவகைவாசனைக்கொடி, கருக.
நூழை - சிறுவாயில், ரு.
நேடி - சின்வீடு, ச
நெடுந்தகை - அளத்தற்கரிய தன்மையி னையுடையான, அசு
நெடுமொழி - உயர்ந்தபுகழ், க௨௨
நெடுவழுதி - அளவிடுதற்கரிய பாண்டிய ன், க௦ள
நெய்தல் - சாப்பறை, க௨௦
நெறி - முடங்குதல், ரு௨.
நேர்ந்தும் - நிச்சயித்தும், கருசு
நோாமம் - இனமொத்தமுத்தாரம், ௨௬
நொடியும் - சொல்லும், கசரு.
நோய் - குற்றம், ககக.
நோலை - எட்கசிவு, ௨௦, ௨க.
நோன் - வலி, கசு.
நோன்மை - பொறுத்தல், க௨௨
நோனுது - பொறாமல், ககக.
நோனுன் - பொறான், கரு,
பகடு - ஏர், க௨௨.
பகல - நுகத்திற்பகலாணி, எக
பட்டாங்கு - உண்மை, எஅ
படர்ந்து - நினைந்து, ககக.
படர்நோய் - நினைவினுல வந்தநோய், கருக.
படலை - தழை, கஅ.
படலைக்குரம்பை - தழைக்கற்றையால் வேய்ந்தகுடில், கஅ.
படிவம் - வேடம், க௦௨.
படுத்து - கொட்டப்பண்ணி,
படுதல் - ஒலித்தல், ரு.
படை - பல்லணம். கரு.
பண்ணமைந்ததேர் - பூட்டமைந்ததேர், கரு.
பண்பு - நன்மை, ௨.
பணிதம் - ஒடியாமை, கருச,
பணிபப - ஏவ, க. தாழப்பண்ண, கக.
பணிப்பு - ஏவல், க.
பணிபதம் - தாழ்ந்தசொல், கரு௨.
பதம் - உணவு, கரு௦. செவ்வி, கரு௦.
புதவு - செங்கோலறுகு, க௨க.
பதிப்பெயாதல் - வடுதவிடுதல், ருசு.
பயம் - பழம், கள,
பயில்வலை - செறிந்தவலையினையுடையா ன், கருசு.
பயிற்றி - சொல்லி, அக
பரி - செலவு, க௨க.
பரிசில - பேறு, அள.
பரிந்த - அறுத்த, சக
பரிந்திட்டான் - அறுத்திட்டான், சுரு
பரிந்து - அறுத்து, கருள.
பரிய - இரங்க, ௨௨.
பரியாமல - அறியாமல், கசச.
பரியாமை - பறுச்செய்யாமை, கரு௦
பலிசை - இலாபம், கரு௦.
பவர் - கொடி, கசச.
பழி - அலர், க௨க.
பழிச்சி - வாழ்த்தி, க௨௨.
பழிப்பு - குறறம், க
பள்ளி - துறந்தாரிருக்குமிடம், ௨௨
பற்றா - பகைவர், ரு.
பனுனிர்தெரியும் - குற்றநீக்கியாராயு ம், ககஅ
பாங்கு - அழகு, க௦ரு. உறவு, சுக. பகு தி, க.
பாழி - பாசறை, ௨௨.
பாணடில - கணுடி, சக.
பாணி - தாளம், கருச, சுருரு.
பாய்மா - சதிபாயுங்குதிரை, ௨ரு.
பாய - பரந்த, ககக.
பாயல் - உறக்கம், கச௦
பாயினுர் - பரந்தார், சக
பாராட்டி - கொண்டாடி, கச௨.
பாராட்டின்று-கொண்டாடியது, க௨சு

பால் - விதி, கஉ௬.
பாழ் - வறுமை, ௨௫.
பாழி - வலி, ௬0. வெற்றி, ௬௬.
பாறு - கழுகு, பருந்து, ௫.
பிண்டம் - சோற்றுத்திரளை, உஅ.
பிணர் - சருச்சரை, க௩௪.
பிணை - மூட்டுவாய், க௬௬.
பிணைய - தழுவ, க௬௬.
பிழிமது - பிழியுமது, க௬.
பிள்ளை - காரிப்புள், கஎ.
பிறங்க - பெருக்க, ௬, க௫. மிக, ௬.
பிறங்கிய - மிகுந்த, ௬௬.
பின்பகல் - உச்சிக்குப்பின், உ0.
பீர் - பீர்க்கு, க௬0.
புகர்வு - உணவு, ககக.
புகல் - வெற்றி, ௬௬.
புகல - விரும்ப, அ, ௬௬.
புகன்று - விரும்பி, க௫.
புடைப்ப - அலைப்ப, ௬௬.
புண்மொழிதல் - நிமித்தஞ் சொல்லுதல், க0.
புணர்ப்பு - துணை, கக௫.
புயல் - மழை, ௬க.
புரிவளை - முறுக்குவளை, க௬0.
புரிவு - தப்புதல், எஅ. பிரியம், க௫உ.
புரைப்பு - ஒப்பு, க௪.
புல்லார் - பகைவர், க0.
புலத்தல் - ஆற்றுதல், க௬௬. முனிதல், க௬அ.
புலம்பு - தனிமை, ககஉ.
புலர்தல் - அகலப்போதல், ௬அ.
புலரி - விடியற்காலம், க௬அ.
புலவேல் - புலால் நாறும்வேல், க0௬.
புழை - சிறுவாயில், ௪0.
புள் - நிமித்தம், அ, க0.
புற்செல்வம் - புல்லியசம்பத்து, கஉஉ.
புறவு - காடு, அ௬; குறுங்காடு, க௪௬.
புன்செய் - கொல்லை, க௫0.
புன்மாலை - புற்கென்றமாலை, கஉ௬.
பே - அச்சம், ௪௫.
பேணி - பரிகரித்து, க௫௫.
பேதுறீஇ - அறிவின்மையுற்று, க௬க.
பைந்தார் - செவ்விமாலை, அ௫.
பைம்பூண் - பசும்பொன்னாற் செய்யப்பட்ட ஆபரணம், எ0.
பையுள் - நோய், க௬எ.
பொங்க - எழும்படி, க0௬.
பொங்கர் - சோலை, க௪௪.
பொங்கி - கோபித்து, ௪உ, கக௬.
பொங்கும் - மீதெழும், அஉ.
பொரீஇயன்று - உவமித்தது, கஉஉ.
பொருநன் - இணைகொட்டுமவன், ௬௬.
பொலிவு - மிகுதி, ௫௬.
பொழில் - பூமி, ௪௬.
பொறி - இலாஞ்சனை, ௬௬, கஉஎ.
பொன் - அழகு, ௫அ, க௪அ.
போகிதழ் - நீண்டஇமை, கஉ௫.
போந்தை - பனந்தோடு, க0௬.
மகன் - வீரன், க௪.
மகிழ் - மது, க௬.
மகிழ்ச்சிநிலை - மிகுதி, கஉ0.
மங்கலம் - ஆக்கம், அ௬. பொலிவு, ௬௬.
மங்குல் - சிறுதுவலைதுவற்றுங்கார், க0௬.
மட்டு - மது, அ.
மடை - மூட்டு, ௪எ.
மண் - ஒப்பனை, ௬௫.
மண்டி - மேற்கொண்டு, ௪அ.
மண்டை - பாத்திரம், உ0.
மண்ணி - சுத்திபண்ணி, கக0.
மண்ணுதல் - மஞ்சனம்பண்ணுதல், ௬௬.
மயங்கல் - கலங்கல், க௬எ.
மயங்கின - கலங்கியிருந்தன, கக௬.
மரபு - வரலாறு, உ௪.
மரிய - பொருந்திய, ககஅ.
மருமம் - உயிர்நிலை, ௬எ.
மருமான் - வழியிலுள்ளான்,
மல்லல் - அழகு, கஉ௬.
மலிந்து - விரைந்து, க௬௫.
மலிபு - நிறைவு, ௬௫.
மலிய - மகிழ, ௬௪.
மலைத்து - மாறுபட்டு, கஉ, உஅ.
மலைதல் - மேற்கொள்ளல், அ, எ0.
மலைப்பு - மாறுபாடு, ௬௫.
மலைய - சூட, ௪.
மறம் - கறுவுதல், கொடுமை, ௬௫, கொடுவினை, க0எ. மாற்சரியம், கஉ, அ௬; மாறுபாடு, ௫அ.
மறலல் - போர்செய்தல், க0அ.
மறவர் - கொடுவினையாளர், ௬உ.
மறவன் - வீரன், ௬.
மறன் - தறுகண்மை, கஎ.
மறிந்து - கீழ்மேலாய், ௬க.
மறிய - முதுகிட, ௯0.
மன்று - அம்பலம், உக, க௪உ.
மனைவேள்வி - இல்லறம், ௬௫.
மாட்டிய - மாளப்பண்ணின, க௫.
மாமை-நிறம், க௬௪, க௫௫. மேனி, க௬0.
மாயம் - வஞ்சம், க0க.

வீடுகொள்ளுதல் - மீட்டல், கஉ.
வீந்தவிய - பட்டுத்தம்பெயர்கெட, உக.
வீரியர் - வீரர், அஉ.
வீழ்ந்த - பட்ட, சக.
வீளை - சத்தம், க0கூ.
வீற்றிருத்தல் - செம்மாந்திருத்தல், எச, கூஉ, கூரு.
வெண்டுறை - ஆடற்பாட்டு, சாஉ.
வெய்யோன் - விரும்பியோன், ருரு, கூசா, கக௭.
வெயர் - வேர், சாரு.
வெருவந்த - அஞ்சத்தக்க, கரு,
வெருவரும் - அஞ்சத்தகும், கசா.
வெள்வளை - சங்கவளை, கூச.
வெள்வாள்-தெளிந்தவாள், அக, அஉ, அஅ.
வெள்ளணிநாள் - பிறந்தநாள், கூச.
வெறி - நறுநாற்றம், க0உ. வள்ளிக் கூத்து, க0க.
வெறியாடுதல் - வள்ளிக்கூத்தையாடுதல், கக.
வென் - வென்றி, உஅ, கூக.
வேட்ப - விரும்ப, கூக.
வேய்ந்த - முடின, கக0, ககஉ.
வேயுள் - போர்வை, அக.
வேலன் - முருகபூசைபண்ணுவோன், கக.
வேள்வி - புணர்ச்சி, கூரு.
வேற்றூர் - பகைவர், கூச.
வேற்றுப்புலம் - பகைவரிடம், ச.
வேற்றுமையா - வேற்றுமை தோன்ற, கருச.
வைகின்று - தங்கினது, க0க.
வையாது - வஞ்சியாமல், க0.

# இக்காலத்து அருகிவழங்குஞ்சொற்கள்.

[ஒவ்வொருவரியிலும் பின்னுள்ள எண்கள், பக்கத்தைத் தெரிவிப்பன.]


அஞ்சாதேகோள், ௧௫௧.
அட்டிமதுரம் (=அதிமதுரம்) ௧௫௧.
அணியிட்டு (=கடைக்கணித்து) ௩௦.
அவதரித்தல் (=தங்குதல்) ௨௪, ௮௦, ௯௧, ௧௧௩.
அழித்துச்சொல்லல் (=மறுத்துச்சொல்லல்) ௨௮.
அற்றறுதிப்பட்டு, ௧௪௮.
ஆசைப்பாடு (=ஆசை) ௧௨௯, ௧௩௦.
உடக்கரிக்கை (=தட்டுகை) ௧௫௦.
எடுத்துவிடுதல் (=சேனையுடன் பகைவர் நகரைச் சூழ்ந்துதங்குதல்) ௨௮, ௨௯.
எண்ணுதேகோள், ௧௦௧.
ஒத்தயாமம் (=நடுஇரா) ௧௩௬.
கலை (=குதிரைக்கலணை) ௬௦.
கைநிலை, ௩௨.
கொண்டாடாதேகோள், ௧௪௬.
சீலிக்கப்பட்ட, ௧௨௫.
செல்வாமரசு (=நேராமரசு) ௧௦௮.
தப்பு (=பிழை) ௧௩௨.
தமப்பன் (=தகப்பன்) ௯௮.
தருப்பணம் (=உணவுவிசேடம்) ௨௧.
தலையாட்டம் (=குதிரைக்கு அணிமயிர்) ௧௦௩, ௧௨௧.
நீண்டாதேகோள், ௧௦௫.
பரிகரித்தல் (=காத்தல்) ௧௨௩.
பலு (=பலகறை) ௭௩.
பிடித்தாடி (=பலகறை) ௭௨.
பிணைக்கு (=துவக்கு) ௪௧, ௧௧௨.
புல்லற்கூ.றியது (=எசியது) ௧௩௭.
புற்கென்ற (=புல்லென்ற) ௧௧௭.
புறவீடு (=புறத்தேவிடுதல்) ௨௦.
பூசற்களரி (=யுத்தபூமி) ௧௪, ௩௯, ௯௨.
போர்க்களரி (=யுத்தபூமி) ௧௪.
மட்டஞ்செய்த (=கத்தரித்த) ௧௨௨.
மயங்காதேகொண்மின், ௧௦௮.
மாணித்தது (=நாணியது) ௬௮.
மேலீடு (=குதிரைக்கலணை) ௧௨௧.
வழக்காட்டு (=ஊடல்) ௧௦௪, ௧௩௯.
வாளாது (=சும்மா) ௮௧.
விடுதல் (=சேனையுடன் பகைவர்நகரத்தைச்சூழ்ந்து தங்குதல், ௨௬, ௨௭, ௨௮.
வீடாரம் (=பாடி வீடு) ௭௬.




## உரையிற்கண்ட

# இலக்கணக்குறிப்பகராதி.

[ஒவ்வோருவரியிலும் பின்னுள்ள எண்கள், பக்கத்தைத் தெரிவிப்பன.]


அசை (=அரோ, ஆல், ஓடு) ௬, ௧௨, ௨௩, ௨௬, ௪௯, ௬௨, ௧௦௩, ௧௧௮, ௧௪௦.

ஆகவென்பது ஆகெனக் குறைந்துநிற்றல், ௧௦௫.

ஆகுபெயர் (=தோல் - கிடுகுபடை, பல்லிதழ் - பூ) ௪௯, ௧௧௪.

ஆவியென்பது அவியெனக் குறுகிநிற்றல், ௮௨.

ஆனந்தம் - ௧௦௪.

ஈற்றசை (=ஏகாரம்) ௨.

எவனென்பது என்னெனக்குறைந்துநிற்றல், ௧௮, ௯௧.

ஒருபாற்கிளவி ஏனைப்பாற்கண்ணும்வருதல் (=சொல்) ௭௫.

ஒருபொருளிருசொற்பிரிவின்மை, ௩௨.

ஒருமைச்சொற் பன்மையுணர்த்துதல் (=மறவர்சினம்) ௯.

ஒன்றினமுடித்தறன்னினமுடித்தல், ௮௭.

ஓகாரம் எதிர்மறைப்பொருளில்வருதல் (=நிற்பதோ) ௩௦.

குற்றெழுத்தின்பின்னின்ற ஆகாரம் குறுக ஆண்டுவரும் உகரம் புலப்படாது வருதல் (=இர) ௧௨௦.

சாதிப்பெயர் (=பாண்) ௬௫.

சாரியை (= கொய்தார மார்பு) ௪௫, ௧௨௨.

சிறப்பும்மை (=களிறும், மறவரும், உழலையும் நிழலையும்) ௧௯, ௩௩, ௧௫௧.

சொல்விழுக்காடு (=வியப்பாமால்) ௨௬.

தாவுவார் என்பது தாவாரென இடைக் குறைந்துநிற்றல், ௫௦.

நகை (=வாழியர்) ௧௪௦.

பண்பு (பைங்கண்) ௭௨.

புகழ்என்பதன்கட் ககரம் விகாரத்தாற்றொகுதல், ௧௫௪.

புலவென்பதனுள் அகரந்தொகுதல், ௩௮.

புறப்புறம், ௧௨௪.

பெருந்திணை, ௧௩௩, ௧௪௪.

மாட்டேற்றில்லாவுருவகம், ௭௨.

விகாரம் (=ஒளிறெஃகம் - ஒளிற்றெஃகம்; பண்பு - பட்பு) ௬௬, ௮௪.

வினைத்தொகை (=மகிழ்துடி) ௮.

வினைமாற்று (=மற்று) ௧௨௬.

வெளிப்படை (=கொய்யாக்குறிஞ்சி - குறிஞ்சிப்பண்) ௩௭.

வென்றோர்விளக்கங்கூறுதல், ௨௮.

# சூசீபத்திரம்.


| | | பக்கம். |
|---|---|---|
| | கடவுள்வாழ்த்து ... | க |
| | சிறப்புப்பாயிரம் ... | க |
| க. | வெட்சிப்படலம் ... | உ |
| உ. | கரந்தைப்படலம் ... | கஉ |
| ௩. | வஞ்சிப்படலம் ... | கஅ |
| ௪. | காஞ்சிப்படலம் ... | உகூ |
| ரு. | நொச்சிப்படலம் ... | ௪௦ |
| சா. | உழிஞைப்படலம் ... | ௪௪ |
| எ. | தும்பைப்படலம் ... | ருஎ |
| அ. | வாகைப்படலம் ... | சாகூ |
| கூ. | பாடாண்படலம் ... | அ௪ |
| க௦. | பொதுவியற்படலம் ... | க௦சா |
| | *சிறப்பிற்பொதுவியற்பால* ... | ககஉ |
| | *காஞ்சிப்பொதுவியற்பால* ... | கரஅ |
| | *முல்லைப்பொதுவியற்பால* ... | கஉ௦ |
| கக. | கைக்கிளைப்படலம் ... | கஉ௪ |
| | *ஆண்பாற்கூற்று* ... | கஉ௪ |
| | *பெண்பாற்கூற்று* ... | கஉஅ |
| கஉ. | பெருந்திணைப்படலம் ... | க௩௩ |
| | *பெண்பாற்கூற்று* ... | க௩௩ |
| | *இருபாற்பெருந்திணை* ... | க௪க |
| | *வென்றிப்பெருந்திணை* ... | க௪கூ |

உ

கணபதி துணை.

# புறப்பொருள்வெண்பாமாலை

## மூலமும் உரையும்.

### கடவுள் வாழ்த்து.

நடையூறு சொன்மடந்தை நல்குவது நம்மே
லிடையூறு நீங்குவது மெல்லாம் - புடையூறு
சேனைமுகத் தாளிரியச் சீறுமுகந் தூறுமதத்
தானைமுகத் தானைநினைத் தால்.

எண்ணிய வெண்ணியாங் கெய்துப கண்ணுதற்
பவள மால்வரை பயந்த
கவள யானையின் கழல்பணி வோரே.

கண்ணவனைக் காண்கவிரு காதவனைக் கேட்கவாய்
பண்ணவனைப் *பாட பதஞ்சூழ்க - வெண்ணிறைந்த
நெய்யொத்து நின்றானை நீலமிடற் றானையென்
கையொத்து நேர்கூப்பு க.

தவளத் தாமரைத் தாதார் கோயி
லவளைப் போற்றுது மருந்தமிழ் குறித்தே.

---

### சிறப்புப்பாயிரம்.

மன்னிய சிறப்பின் வானோர் வேண்ட
தென்மலை யிருந்த சீர்சான் முனிவரன்
றன்பாற் றண்டமிழ் தாவின் றுணர்ந்த
துன்னருஞ் சீர்த்தித் தொல்காப் பியன்முதற்
பன்னிரு புலவரும் பாங்குறப் பகர்ந்த
பன்னிரு படலம் பழிப்பின் றுணர்ந்தோ
னோங்கிய சிறப்பி னுலகமுழு தாண்ட
வாங்குவிற் றடக்கை வானவர் மருமா
னைய னாரித னகலிடத் தவர்க்கு

---

* பாடப்பதஞ்சூழ்கவென்றும் பாடம்.

மையறு புறப்பொருள் வழாலின்று விளங்க
வெண்பா மாலை யெனப்பெயர் நிறீஇப்
பண்புற மொழிந்தனன் பான்மையிற் றெரிந்தே.

என்பது பாயிரம்.

இதனுட் பாயிரமுரைத்தவெல்லாமுரைத்துக்கொள்க.

இதன்பொருள். நின்றுநிலைத்த நன்மையினையுடைய தேவர்கள் வேண்டிக் கொள்ளப் பொதியின்மலையிலிருந்த அழகமைந்த இருடி தன்னிடத்துக் குளிர்ந்த தமிழை வருத்தமின்றியறிந்த கிட்டுதற்கரிய மிக்க புகழினையுடைய தொல்காப்பிய னென்னும் ஆசிரியனைமுதலான பன்னிருவரான அறிஞரும் பகுதியில் மிகச் சொன்ன பன்னிருபடலமென்னும்நூலினைக் குற்றமின்றியே அறிந்தோன், உயர்ந்த மேம்பாட்டினையுடைய பூமியை முழுதுமாண்ட வளைந்தவில்லைப் பெருத்த கையிலே யுடைய சேரமான்கள்வழியினுள்ளான், ஐயனாரிதனென்னும் பெயரினையுடையவன், பரந்தநிலத்திலுள்ளவர்க்குக் குற்றமற்ற புறப்பொருளை வழுவுதலின்றியேதெளிய வெண்பாமாலையென்னு நாமத்தினைநிறுத்தி நன்மைமிகச்சொன்னான், முறைமை யாலே ஆராய்ந்து. என்றவாறு.

ஏகாரம் - ஈற்றசை.

பான்மையிற்றெரிந்து பண்புறமொழிந்தனன் ஐயனாரிதனெனக்கூட்டுக.

மன்னிய - தெரிந்தவென்றுமாம். முனிவரன் - இருடிகளில் *வரிட்டனாயுள் ளான் அவன் அகத்தியன்.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

---

முதலாவது

# வெட்சிப்படலம்.

---

வெட்சி, வெட்சி யரவம் விரிச்சி செலவு
வேயே புறத்திறை யூர்கொலை யாகோள்
பூசன் மாற்றே புகழ்சுரத் துய்த்த
றலைத்தோற் றம்மே தந்துநிறை பாதி
டுண்டாட் டியர்கொடை புலனறி சிறப்பே
பிள்ளை வழக்கே பெருந்துடி நிலையே
கொற்றவை நிலையே வெறியாட் டெனப்பட
வெட்டிரண் டேனை நான்கொடு தொகைஇ
வெட்சியும் வெட்சித் துறையு மாகும்.

என்பதுசூத்திரம்; என்னுதலிற்றோவெனின் வெட்சித்திணையும் துறையுமா மாறு உணர்த்துதல்நுதலிற்று.

---

* வரிட்டன்=வரிஷ்டன் - மிகப்பெரியவன்.

இ - ள். வெட்சி, வெட்சியரவம், விரிச்சி, செலவு, வேய், புறத்திறை, ஊர்கொலை, ஆகோள், பூசன்மாற்று, சுரத்துய்த்தல், தலைத்தோற்றம், தந்துநிறை, பாதீடு, உண்டாட்டு, கொடை, புலனறிசிறப்பு, பிள்ளைவழக்கு, துடிநிலை, கொற்றவைநிலை, வெறியாட்டு என இவை இருபதும் வெட்சித்திணையும் துறையுமாம். எ - று.

வெட்சியென்பது, இருவகைத்து; மன்னுறுதொழிலும் தன்னுறு தொழிலுமென.

வென்றி வேந்தன் பணிப்பவும் பணிப்பின்றியுஞ்
சென்றி கன்முனை யாதந் தன்று.

இ - ள். வெற்றியினையுடையஅரசன் ஏவவும் ஏவலின்றியும்போய் மாறுபாட்டினையுடைய வேற்றுப்புலத்துப் பசுநிரையைக் கைக்கொண்டது. எ - று.

அவற்றுள், மன்னுறுதொழில் வருமாறு :—

இ - ள். முன்புசொன்ன இரண்டனுள்ளும் மன்னுறுதொழில் வருமுறைமை. எ - று.

மண்டு மெரியுண் மரந்தடிந் திட்டற்றுக்
கொண்ட கொடுஞ்சிலையன் கோறெரியக் - கண்டே
யடையார் முனையலற வையிலைவேற் காளை
விடையாயங் கொள்கென்றான் வேந்து.

இ - ள். மிகக் கொளுந்தியெரியாநின்ற நெருப்பினுள்ளே மரத்தைவெட்டியிட்டதன்மைத்தாகக் கையிலே வாங்கிக்கொண்ட கொடியவில்லையுடையவன் அம்பை ஆராயக்கண்டும் பகைவர்போர்கலங்க வியக்கத்தக்க இலைத்தொழில்களாற் சிறந்தவேலினையுடைய காளாய், ஏற்றையுடையநிரையைக் கொள்கவென்றுசொன்னான் அரசன். எ - று.

யாரைக் கொடுஞ்சிலையானைக்கண்டுமென உம்மைவிரித்துரைக்க. ஏகாரம் - ஈற்றசை. கொண்ட - கொள்ளப்பட்டன; யாவை? நிரை எனமுற்றுக்கிச் சூத்திரத்திற்கேற்பப் பொருளுரைப்பாருமுளர். (க)

இனித் தன்னுறுதொழில் வருமாறு.

இ - ள். இனித் தன்னுறுதொழில் வருமுறைமை. எ - று.

அருஅ நிலைச்சாடி யாடுறு தேறன்
மருஅன் மழைத்தடங் கண்ணி - பொருஅன்
கடுங்கண் மறவன் கழல்புனைந்தான் காலை
நெடுங்கடைய நேரார் நிரை.

இ - ள். கள்ளருத நிலைத்தாழியில் அடுதலுற்றமதுத்தெளிவைமருதே; குளிர்ந்த பெரியகண்ணினையுடையாய், *தனிசுபொருன் தறுகண்வீரன், காலிலே வீரக்கழலைக்கட்டினான், காலையிலே நின் நெடியவாசலிடத்தனவாம், பகைவர்நிரை. எ-று.

நிரை காலை நின்கடையவாதலால் மருதே வார்ப்பாயாகவென்க.

* தனிசு - கடன்.

நொடியகடையிலேவைத்துகின்றன சோர்கிளைவென்று இறந்தகாலப்பொரு ளாக்கிக் கடுங்கண்மறவன்கழல்புனைந்தவனெனப்பெயராக்கிப் பின்பு வார்ப்பே னெனப் பொருளென்றலுமொன்று. (உ.)

## வெட்சியரவம் :—

கலவார் முனைமேற்
செலவமர்ந் தன்று.

இ - ள். பொருந்தாதார் முனையிடத்துப் போதலை விரும்பியது. எ - று.

வரலாறு. இ - ள். *வருமுறைமை. எ - று.

நெடிபடு கானத்து நீள்வேன் மறவ
ரடிபடுத் தாரதர் செல்வான் - றுடிபடுத்து
வெட்சி மலைய விரவார் மணிநிரைக்
கட்சியுட் காரி யெழும்.

இ - ள். சிள்வீடுகேறங்குங்காட்டிடத்து நீண்ட வேலினையுடையமறவர் காலி லேசெருப்பைத்தொட்டுக் கடத்தற்கரியவழியிடத்துச் செல்வான்வேண்டித் துடி யைக்கொட்டப்பண்ணி வெட்சிப்பூவைச்சூடப் பகைவர்மணியாற்சிறந்த பசுவினை யுடைத்தான காட்டிடத்தக காரியென்னும்புள்ளுந் துந்நிமித்தமாக எழாநிற்கும். எ - று. (ரு)

## விரிச்சி :—

வேண்டிய பொருளின் விளைவுநன் கறிதற்
கீண்டிருண் மாலைச் சொல்லோர்த் தன்று.

இ - ள். விரும்பியபொருளின் ஆக்கத்து அழகுணர்தற்குச் செறியும் இரு ண்ட மாலையிடத்து நற்சொற்கேட்டது. எ - று.

†வ - று. எழுவணி சீறூ ரிருண்மாலை முன்றிற்
குழுவினங் கைகூப்பி நிற்பத் - தொழுவிற்
குடக்கணீ கொண்டுவா வென்றாள் குனிவிற்
றடக்கையாய் வென்றி தரும்.

இ - ள். கணையஞ்சூழ்ந்த சீறூரில் இருளையுடையமாலைக்காலத்து முற்றத் தலே திரண்ட நங்கூட்டம் கைகுவித்துநிற்பக் கட்சாடியிருக்கும் ‡ஏணியிற் குடத் துக்கன்னை எடுத்துக்கொண்டு வாவென்றாள்; ஆதலால், வளைந்தவில்லைப் பெரிய கையிலே உடையவனே, நமக்கு வெற்றியைத்தரும். எ - று.

'குடக்கணுகொண்டுவாவென்றாள்' என்று பாடமோதி மேல்பாற்றொழுவத் திற் பசுவையடித்துக்கொண்டுவாவென்றாளென்று பொருளுரைப்பாருமுளர்.(சு)

## செலவு :—

வில்லே ருழவர் வேற்றுப் புலமுன்னிக்
கல்லேர் கானங் கடந்துசென் றன்று.

---

* வருநெறியென்றும் பிரதிபேதமுண்டு. † வ - று=வரலாறு.
‡ மேனியென்றும் பிரதிபேதமுண்டு.

இ - ள். வில்லாகிய ஏரினையுடைய உழவர் மாற்றாரிடத்தைக்[illegible] கற்பொருந்தினகாட்டைக் கழிந்துபோனது. எ - று.

வ - று. கூற்றினத் தன்னார் கொடுவி லிடனேந்திப்
பாற்றினம் பின்படர முன்படர்ந் - தேற்றின
நின்ற நிலைகருதி யேகினார் நீள்கழைய
குன்றங் கொடுவில் லவர்.

இ - ள். கூற்றின்குழுவினையொப்பார் வளைந்தவில்லை இடப்பக்கத்திற்கொண்டு கழுகும் பருந்தும் பின்னேதொடர்ந்துவரத் தமது வலியானேநெருங்கிப் போனார், வளைந்தவில்லாளர்தம் ஏறுபொருந்திய பசுநிரைநின்ற நிலைமையையுடைய உயர்ந்தமூங்கிலையுடைத்தான குன்றத்தைநினைந்து. எ - று.

போனார் கூற்றினத்தன்னாரெனக்கூட்டுக. (௫)

## வேய்:—

பற்றார் தம்முனைப் படுமணி யாயத்
தொற்றா ராய்ந்த வகையுரைத் தன்று.

இ - ள். பகைவர்தம்முனையிடத்து ஒலிக்குமணியினையுடைய நிரையிடத்து ஒற்றினைத்தெரிந்த கூறுபாட்டினைச்சொல்லியது. எ - று.

வ - று. நிலையு நிரையு நிரைப்புறத்து நின்ற
சிலையுஞ் செருமுனையுள் வைகி - யிலைபுனைந்த
கள்ளவிழ் கண்ணிக் கழல்வெய்யோய் சென்றறிந்து
நள்ளிருட்கண் வந்தார் நமர்.

இ - ள். பசுநின்ற இடமும் பசுவினுடைய அளவும் பசுவினுடைய புறங் காத்துநின்ற படையினளவும் போர்ப்புலத்திற்றங்கிப் பச்சிலையுடனே விரவித் தொடுத்த தேன்பொழியுமாலையினையும் வீரக்கழலினையுமுடைய போரைவிரும்பியோய், வேற்றுப்புலத்திலேபோய் ஆராய்ந்து நடுவிருளிடத்து நஞ்சுற்றத்தார் வந்தார். எ - று. (௬)

## புறத்திறை:—

நோக்கருங் குறும்பி னூழையும் வாயிலும்
போக்கற வளைஇப் புறத்திறுத் தன்று.

இ - ள். பகைவரது கண்ணாற்பார்த்தற்கரிய குறும்பின்நூழையும் பெருவாயிலும் யாவரும் புறப்படாதபடிவளைந்து ஊர்மருங்கேவிட்டது. எ - று.

வ - று. உய்ந்தொழிவா ரீங்கில்லை யூழிக்கட் டீயேபோன்
முந்தமரு ளேற்றார் முரண்முருங்கத் - தந்தமரி
னொற்றினா னாய்ந்தாய்ந் துறுவலி யோரரணை
சுற்றினார் போகாமற் சூழ்ந்து.

இ - ள். பிழைத்திருப்பார் இவ்விடத்து யாவருமில்லை; யுகாந்தகாலத்துநெருப்பையொப்ப முற்படப்பூசலில் எதிர்ந்தார் மாறுபாடுகெடத் தம்முடைய உற்றா

ராய நிற்றராலே ஆராய்ந்தாராய்ந்து மிகுந்தவலியினையுடையோர் அரணினை வளைந்துகொண்டார், ஒருவரும் தப்பிப்போகாதபடி விசாரித்து. எ - று.

சூழ்ந்து சுற்றிநின்றெங்க. (எ)

ஊர் கொலை:—

விரைபரி கடவி வில்லுடை மறவர்
குரையழ னடப்பக் குறும்பெறிந் தன்று.

இ - ள். கடுகினசெலவையுடைய பரியைமுடுக்கி வில்லினையுடையவீரர் முழக்கெரிபரப்ப அரணினைஅழித்தது. எ - று.

வ - று. இகலே துணையா வெரிதவழச் சீறிப்
பகலே யரிதென்னூர் புக்குப் - பகலே
தொலைவிலார் வீழத் தொடுகழ லார்ப்பக்
கொலைவிலார் கொண்டார் குறும்பு.

இ - ள் மாறுபாடேதுணையாக நெருப்புநடப்பக் கோபித்துப் புகுதற்கரிய இடமென்றுபாராதே உள்புக்குப் பகற்பொழுதே ஒருவர்க்குந்தோலாதார்படக் கட்டும் வீரக்கழல் ஆரவாரஞ்செய்யக் கொலைத்தொழிலாற் சிறந்த வில்லினையுடையார் அரணினைக் கைக்கொண்டார். எ - று. (அ)

ஆ கோள்:—

வென்றார்த்து விறன்மறவர்
கன்றோடு மாதழீஇ யன்று.

இ - ள். பகைவர்முனையினைக்கடந்து ஆரவாரித்து வெற்றியினையுடையவீரர் கன்றுடனே பசுநிரையைக்கைக்கொண்டது. எ - று.

வ - று. கொடுவரி கூடிக் குழூஉக்கொண் டனைத்தா
னெடுவரை நீள்வேய் நரலு - நடுவூர்க்
கணநிரை கைக்கொண்டு கையகலார் நின்ற
நிணநிரை வேலார் நிலை.

இ - ள். புலி தம்மில் இனையொத்துத் திரட்சிகொண்டதன்மைத்து; உயரிய மலையிடத்து நீண்டமூங்கிலொலிக்கும் ஊரினடுத் திரண்டபசுவினைக்கைப்பற்றி அவ்விடத்துநின்றுநீங்காராய் நிணத்தைக்கோத்த வேலினையுடையார் நின்றநிலை. எ - று.

ஆல் - அசை. (கூ)

பூசன் மாற்று:—

கணம்பிறங்கக் கைக்கொண்டார்
பிணம்பிறங்கப் பெயர்த்திட்டன்று.

இ - ள். நிரைத்திரட்சிபெருக்கக் கைப்பற்றினகரந்தையார்தம் பிணம்பெருக்க வெட்சியார்கெடுத்தது. எ - று.

வ - று. சூழ்ந்த நிரைபெயரச் சுற்றித் தலைக்கொண்டார்
வீழ்ந்தனர் வீழ்ந்தார் விடக்குணிய - தாழ்ந்த
குலவுக் கொடுஞ்சிலைக்கைக் கூற்றனையா ரெய்த
புலவுக் கணைவழிபோய்ப் புள்.

இ - ள். வெட்சியார்வளைந்துகொண்டநிரைமீளச் சூழ்ந்துகிட்டின கரந்தையார் பட்டுவீழ்ந்தார்; வீழ்ந்தவருடைய தசையைத்தின்னவேண்டிப் படிந்தன; வளைந்த கொடியவில்லாற் சிறந்த கையினையுடைய கூற்றத்தையொப்பார் எய்த புலால் நாறும் அம்பு போனவழியேபோய்ப் பறவைகள். எ - று. (௧0)

சு ர த் து ய் த் த ல் :—

அருஞ்சுரத்து மகன்கானத்தும்
வருந்தாம னிரையுய்த்தன்று.

இ - ள். அரியவழியிடத்தும் பரந்தகாட்டின்கண்ணும் நோவுபடாதபடி பசு நிரையைச்செலுத்தியது. எ - று.

வ - று. புன்மேய்ந் தசைஇப் புணர்ந்துடன்செல் கென்னும்
வின்மே லசைஇயகை வெல்கழலான் - றன்மேற்
கடுவரை நீரிற் கடுத்துவரக் கண்டு
நெடுவரை நீழ னிரை.

இ - ள். புல்லைமேய்ந்து இளைப்பாறி இனத்துடன்கூடித் தம்மில் ஒக்கப் போவனவாகவென்று சொல்லாநின்றான், வில்லின்மேல்வைத்தகையினையும் வெல்லும் வீரக்கழலினையுமுடையவன்; தன்மேலே செங்குத்தானமலையினின்றும் விழா நின்றநீர்போல முடுகிவருங்கரந்தையாரைக்கண்டும், நீண்டவரையினது நீழலிலே ஆனிரையை. எ - று.

ஆனிரையைப் புணர்ந்துடன் போகென்னுமெனக்கூட்டுக. (௧௧)

தலைத்தோற்றம் :—

உரவெய்யோ னினந்தழீஇ
வரவுணர்ந்து கிளைமகிழ்ந்தன்று.

இ - ள். வலியினைவிரும்பினோன் ஆனினத்தைக் கைக்கொண்டுவருதலையறிந்து உறவுமுறையார் மனமகிழ்ந்தது. எ - று.

வ - று. மொய்யண லானிரை முன்செல்லப் பின்செல்லு
மையணற் காளை மகிழ்துடி - கையணல்
வைத்த வெயிற்றியர் வாட்க ணிடனாட
வுய்த்தன் றுவகை யொருங்கு.

இ - ள். செறிந்ததாடியையுடைய பசுநிரைமுன்னேபோகப் பின்னேவரும் மயிராற்கறுத்தகபோலத்தினையுடைய காளை மகிழ்ந்துகொட்டுந்துடி நிரைகொண்டு வரப்போன வெட்சியாருடைய நிலைமையையறியாது வெறுப்பினாற் கையைக்

கதுப்பிலேவைத்த வேட்டுவிச்சியர் வாள்போன்றகண் இடக்துடிப்பச்செலுத் திற்று, பிரியத்தைத, பலர்க்குமொக்க. எ - று.
மகிழ்துடி ஒருங்கு உய்த்தன்றெனக.
மகிழ்துடி - வினைத்தொகை. (கஉ)

## தந்து நிறை:—

வார்வலந்த துடிவிம்ம
ஊர்புகல நிரையுய்த்தன்று.

இ - ள். வாராலேகட்டின துடிகறங்க ஊரினுள்ளார்விரும்ப ஆனிரையை மன்றத்திடத்துச்செலுத்தியது. எ - று.

வ - று. தண்டா விருப்பின டன்னை தலைமலைந்த
வண்டார் கமழ்கண்ணி வாழ்கென்று - கண்டா
ளணிநிரை வாண்முறுவ லம்மா வெயிற்றி
மணிநிரை மல்கிய மன்று.

இ - ள். தணியாத உவகையினையுடையளாகித் தன்னுடைய சுவாமி தலையிலேசூடின வண்டுநிறைந்த நறுநாற்றத்தினையுடைய மாலை வாழ்வதாகவென்று நோக்கினள், அலங்காரமுடைத்தாக ஒழுங்குபட்டு ஒளிவிடாநின்றபல்லினையும் அழகியபெருமையினையுமுடைய மறத்தி; மணியணிந்த பசுமிக்கமன்றத்தை. எ-று.
எயிற்றி கண்டாளெனக்கூட்டுக. (கரு)

## பாதீடு:—

கவர்கணைச் சுற்றங் கவர்ந்த கணநிரை
அவரவர் வினைவயி னறிந்தீந் தன்று.

இ - ள். கவர்த்த தலையம்பினையுடைய கிளை கொள்ளைகொண்டபசுநிரையைச் செய்தார் செய்த தொழில்வகையை அறிந்துகொடுத்தது. எ - று.

வ - று. ஒள்வாண் மலைந்தார்க்கு மொற்றாய்ந் துரைத்தார்க்கும்
புள்வாய்ப்பச் சொன்ன புலவர்க்கும் - விள்வாரை
மாறட்ட வென்றி மறவர்தஞ் சீறூரிற்
கூறிட்டார் கொண்ட நிரை.

இ - ள். அழகியவாட்போரினை மேற்கொண்டோர்க்கும் ஒற்றுத்தெரிந்து சொன்னோர்க்கும் நிமித்தம்தப்பாவகைசொன்ன அறிவுடையோர்க்கும் தம்முடன் வேறுபடுவோரை மாறுபாடுகெடுத்த வெற்றியினையுடைய மறவினையாளர் தஞ்சீறூரிடத்துப் பங்கிட்டார்,'கைக்கொண்டுவந்தநிரையை. எ - று. (கசு)

## உண்டாட்டு:—

தொட்டிமிழுங் கழன்மறவர்
மட்டுண்டு மகிழ்தூங்கின்று.

இ - ள். கட்டி ஆர்க்கும் வீரக்கழலினையுடைய நறுகண்ணர் மதுவையுண்டு மனங்களித்து ஆடியது. எ - று.

வ - று. இளிகொண்ட தீஞ்சொ லிளமா வெயிற்றி
களிகொண்ட நோக்கங் கவற்றத் - தெளிகொண்ட
வெங்கண் மலிய விளிவதுகொல் வேற்றூர்மேற்
செங்கண் மறவர் சினம்.

இ - ள். இளியென்னும் இசையிணைக்கொண்ட இனியசொல்லினையுடைய சிமதியான இளையவேட்டுவிச்சி களிப்புக்கொண்டபார்வை வருத்தவும் தெளிவு கொண்ட வெவ்விய கள்ளையுண்டமகிழ்ச்சி மிகவும் கெடுவதுபோலும்; பகைவர் மேற் சிவந்த கண்ணினையுடைய வீரர்செற்றம். எ - று.

சினம் விளிவதுகொலெனக்கூட்டுக.

இது, *"முன்னிலைசுட்டிய" என்பதனுளமைத்த "ஏவ லிளையர் தாய்வயிறு கரிப்ப" என்பதுபோலாம். (கரு)

## கொடை:—

ஈண்டியநிரை யொழிவின்றி
வேண்டியோர்க்கு விரும்பிவீசின்று.

இ - ள். திரண்ட பசுநிரையொன்றுந்தப்பாமே தம்மை வேண்டினவர்களுக் குப் பிரியப்பட்டுக் கொடுத்தது. எ - று.

வ - று. அங்கட் கிணையன் றுடியன் விறலிபாண்
வெங்கட்கு வீசும் விலையாகும் - செங்கட்
செருச்சிலையா மன்னர் செருமுனையிற் சீறி
வரிச்சிலையாற் றந்த வளம்.

இ - ள். அழகிய கண்ணாற்சிறந்த கிணையையுடையவனும் துடிகொட்டுமவ னும் பாணிச்சியும் பாணனும் வெவ்விய கள்ளிற்குக்கொடுக்கும் விலையாகும்; சிவந்த கண்ணினையுடையராய்ப் போர்க்கு இடையாதமன்னர் பூசன்முகத்துக்கோபித்து வரிதலையுடைய வில்லாலேகொண்ட ஆனிரையாகியசெல்வம். எ - று.

வளம் வெங்கட்குவீசும் விலையாகுமெனக்கூட்டுக. (கசு)

## புலனறிசிறப்பு:—

வெம்முனைநிலை யுணர்த்தியோர்க்குத்
தம்மினுமிகச் சிறப்பீந்தன்று.

இ - ள். வெவ்விய வேற்றுப்புலத்தினது நிலைமையை அறிவித்தார்க்குத் தம் முடையகூற்றினும் பெருகச் சிறப்புக்கொடுத்தது. எ - று.

வ - று. இறுமுறை யெண்ணு திரவும் பகலுஞ்
செறுமுனையுட் சென்றறிந்து வந்தார் - பெறுமுறையி
னட்டுக் கனலு மயில்வேலோ யொன்றிரண்
டிட்டுக் கொடுத்த வியல்பு.

---

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், எச்சவியல், சுகூ.

இ - ள். தாம் இறும்வகையையாராயாதே இரவின்கண்ணும் பகலின்கண்ணும் கொல்லும்பகைப்புலத்துப்போய் ஆராய்ந்துவந்தார் பெறக்கடவபங்கினோடும் கொன்று எறியும் கூர்வேலினையுடையோய், ஒன்றாதல் இரண்டாதல் பசு வை நிக்கொடுத்தல் முறைமை. எ - று. (௧௬

## பிள்ளைவழக்கு :—

பொய்யாது புண்மொழிந்தார்க்கு
வையாது வழக்குரைத்தன்று.

இ - ள். தப்பாமல் நிமித்தஞ்சொன்னார்க்கு வஞ்சியாதே பெறுமுறைமையைச்சொல்லியது. எ - று.

வ - று. புல்லார் நிரைகருதி யாஞ்செல்லப் புண்ணலம்
பல்லா ரறியப் பகர்ந்தார்க்குச் - சொல்லாற்
கடஞ்சுட்ட வேண்டா கடுஞ்சுரையா னன்கு
குடஞ்சுட் டினத்தாற் கொடு.

இ - ள். பகைவரது ஆனிரையைக் கொள்ளநினைந்து யாம்போக நிமித்தநன்மையைப் பலரு முணரச்சொன்னார்க்கு மொழியாற் பெறுமுறைமை இதுவென்றுகருதவேண்டா ; ஒன்றொருகுடம்பால்போதும் மிக்கமடியினையுடைய பசுக்கான்கு இனங்கடோறுங்கொடு. எ - று.

கடஞ்சுட்டவேண்டா கொடுவென்க. (௧௮

## துடி நிலை :—

தொடுகழன் மறவர் தொல்குடி மரபிற்
படுக ணிமிழ்துடிப் பண்புரைத் தன்று.

இ - ள். கட்டும் கழல்வீரர் பழங்குடிமுறைமையில மிக்ககண்ணினையுடைத்தாய் ஒலிக்கும் துடியைக்கொட்டுமவன்குணத்தைச்சொல்லியது. எ - று.

வ - று. முந்தை முதல்வர் துடிய ரிவன்முதல்வ
ரெந்தைக்குத் தந்தை யிவனெனக்கு – வந்த
குடியொடு கோடா மரபினோற் கின்னும்
வடியுறு தீந்தேறல் வாக்கு.

இ - ள். என்பாட்டனுடையபாட்டன் முதலாயினார்க்குத் துடிகொட்டினார் இவன்பாட்டனுடையபாட்டன் முதலாயினார் ; என்றந்தைக்கு இவன்றந்தை துடிகொட்டினான் ; இவன் எனக்குத்துடிகொட்டுவான் ; வழிவந்தகுடிமுறைமையோடு பிறழாத முறைமையினையுடையவனுக்கு இன்னமும் வடித்தலுற்ற தித்தித்த மதுவினதுதெளிவை வார்ப்பாயாக. எ - று. (௧௯)

## கொற்றவைநிலை :—

ஒளியினீங்கா விறற்படையோ
னளியினீங்கா வருளுரைத்தன்று.

இ - ள். விளக்கத்தினின்றும் ஒழியாத வெற்றியான்மிக்க ஆயுதத்தினையுடையோளது இரக்கத்தினின்றும் ஒழியாத கருணையைச்சொல்லியது. எ - று.

வ - று. ஆளி மணிக்கொடிப் பைங்கிளிப் பாய்கலைக்
கூளி மலிபடைக் கொற்றவை - மீளி
யரண்முருங்க வாகோள் கருதி னடையார்
முரண்முருங்கத் தான்முந் துறும்.

இ - ள். சிங்கத்தாற்சிறந்த அழகியகொடியினையும் பசுங்கிளியினையும் பாயுங்கலையினையும் பேய்மிக்கபடையினையுமுடைய துர்க்காதேவி, தலைவன் பகைவர் துறம்புமுறிய ஆனிரையைக் கொள்கையைநினைக்கிற், பகைவர்மாறுபாடுகெடத் தான்முன்னே எழுந்தருளும். எ - று. (உ0)

## வெறியாட்டு:—

வாலிழையோர் வினைமுடிய
வேலனோடு வெறியாடின்று.

இ - ள். அழகிய ஆபரணத்தையுடையார் நினைத்ததொழில்முடிய முருகபூசைபண்ணுமவனோடு வள்ளிக்கூத்தை ஆடியது. எ - று.

வ - று. காணி லரனுங் களிக்குங் கழன்மறவன்
பூணிலங்கு மென்முலைப் போதரிக்கண் - வாணுத
லுன்முருகு மெய்ந்நிறீஇத் தாமம் புறந்திளைப்ப
வேன்முருகொ டாடும் வெறி.

இ - ள். கண்டானாயின் நிருத்தப்பிரியனாகிய நீலகண்டனும் மகிழ்வன்; கட்டும்கழலினையுடைய மறவினையாளன்றன் ஆபரணம்விளங்கும் மெல்லியமுலையினையும் பூப்போன்ற அரிபரந்தகண்ணினையும் ஒளிமிக்கநுதலினையுமுடையவடான் நறுநாற்றத்தை உடம்பிலேநிறுத்தி மாலை பக்கத்தேஅசைய வேலினையுடையபிள்ளையார்க்கு ஆடும்வள்ளிக்கூத்தை. எ - று.

வள்ளிக்கூத்தைக்காணின் அரனும்களிக்குமென்க. (உக)

வெட்சித்திணைப்பாட்டு இரண்டும் துறைப்பாட்டுப் பத்தொன்பதும் முடிந்தன.

முதலாவது

வெட்சிப்படலமுற்றிற்று.

---

## இரண்டாவது

# கரந்தைப்படலம்.

---

கதமலி கரந்தை கரந்தை யரவ
மதரிடைச் செலவே யரும்போர் மலைதல்
புண்ணொடு வருதல் போர்க்களத் தொழித
லாளெறி பிள்ளை பிள்ளைத் தெளிவே
பிள்ளை யாட்டொடு கையறு நிலையே
நெடுமொழி கூறல் பிள்ளைப் பெயர்ச்சி
வேத்தியன் மலிபே மிகுகுடி நிலையென
வருங்கலை யுணர்ந்தோ ரவைபதி னான்குங்
கரந்தையுங் கரந்தைத் துறையு மென்ப.

என்-னின், கரந்தைத்திணையும் துறையுமாமாறு உணர்த்துதனுதலிற்று.

இ - ள். கரந்தை, கரந்தையரவம், அதரிடைச்செலவு, போர்மலைதல், புண்ணொடுவருதல், போர்க்களத்தொழிதல், ஆளெறிபிள்ளை, பிள்ளைத்தெளிவு, பிள்ளையாட்டு, கையறுநிலை, நெடுமொழிகூறல், பிள்ளைப்பெயர்ச்சி, வேத்தியன்மலிபு, குடிநிலை என இவைபதினான்கும் கரந்தைத்திணையும் துறையுமாம். எ - று.

### கரந்தை:—

மலைத்தெழுந்தோர் மறஞ்சாயத்
தலைக்கொண்ட நிரைபெயர்த்தன்று.

இ - ள். மாறுபட்டெழுந்தார் மாற்சரியங்கெடக் கைப்பற்றினநிரையை மீட்டது. எ - று.

வ - று. அழுங்கனீர் வையகத் தாருயிரைக் கூற்றம்
விழுங்கியபின் வீடுகொண் டற்றாற் - செழுங்குடிக
டாஅஅர் கரந்தை தலைமலைந்து தாங்கோட
னேயார்கைக் கொண்ட நிரை.

இ - ள். ஆரவாரியாநின்ற கடல்சூழ்ந்த ஞாலத்துப் பெறுதற்கரிய உயிரைக் கூற்றுவன் உண்டபின்பு மீட்ட தன்மைத்து; வளப்பத்தினையுடையமறக்குடிகள் கொத்துநிறைந்தகரந்தையைத் தலையிலேசூடித் தாங்கொள்ளுமது; பகைவர்கைப் பற்றின ஆனிரையை. எ - று.

கோடல் வீடுகொண்டற்றெனக.

ஆல் - அசை.

தாம்கோடலைப்பொருத வெட்சியார்கையினின்றும் கொள்ளப்பட்டன நிரை: இது வீடுகொண்டற்றென்றுமாம். (க)

## காந்தையரவம்:—

நிரைகோட் கேட்டுச் செய்தொழி லொழிய
விரைவனர் குழூஉம் வகையுரைத் தன்று.

இ - ள். பசுநிரையைக் கைப்பற்றினமைகேட்டுச் செய்யாநின்ற காரியந் தவிரக் கடுகினராகித் திரளுங்கூறுபாட்டைச்சொல்லியது எ - று.

வ - று. காலார் கழலார் கடுஞ்சிலையார் கைக்கொண்ட
வேலார் வெருவந்த தோற்றத்தார் - காலன்
கிளர்ந்தாலும் போல்வார் கிணைப்பூசல் கேட்டே
யுளர்ந்தார் நிரைப்பெயர்வு முண்டு.

இ - ள். காலிலே நிறைந்த வீரக்கழலினையுடையார், கொடியவில்லினையுடையார், கையிலேயெடுத்த வேலினையுடையார், அஞ்சத்தக்க காட்சியினையுடையார், கூற்றுவன்கோபித்தாலுமொப்பார், தடாரியோசையைக்கேட்டு அசைந்தார்; வெட்சியார்கொண்ட ஆனிரை மீள்கையும் கூடும். எ - று. (உ)

## அதரிடைச்செலவு:—

ஆற்று ரொழியக் கூற்றெனச் சினைஇப்
போற்றார் போகிய நெறியிடை யேகின்று.

இ - ள். செருவினைப்பொருதார் ஊரிலேநிற்கக் காலனையொப்பக்கோபித்துப் பகைவர்போன வழியிடத்தேசென்றது. எ - று.

வ - று. சங்குங் கருங்கோடுந் தாழ்பீலிப் பல்லியமு
மெங்கும் பறையோ டெழுந்தார்ப்ப - வெங்க
லழற்சுரந் தாம்படர்ந்தா ரான்சுவட்டின் மேலே
நிழற்கதிர்வேன் மின்ன நிரைத்து.

இ - ள். சங்கும் கரிய வீரக்கொம்பும் தாழ்ந்தபீலியையுடைய சிலவிசேடவாச்சியங்களும் பறையோடு எங்கும் எழுந்து ஆரவாரிப்ப வெவ்விய கல்லினையுடைய அழற்பரந்தகாட்டிலே தாம்போயினார், நிரைபோன அடிப்பாடே நிழல்விடும் சுடர்வேல் ஒளிவிட நிரைத்து. எ - று. (௩)

## போர்மலைதல்:—

வெட்சி யாரைக் கண்ணுற்று வளைஇ
யுட்குவரத் தாக்கி யுள்செருப் புரிந்தன்று.

இ - ள். வெட்சியாரைக்கிட்டிச்சூழ்ந்து அஞ்சத்தாக்கி எடுப்பும் சாய்ப்புமான பூசலை மேற்கொண்டது. எ - று.

வ - று. புலிக்கணமுஞ் சீயமும் போர்க்களிறும் போல்வார்
வலிச்சினமு மானமுந் தேசு - மொலிக்கு
மருமுனை வெஞ்சுரத் தான்பூசற் கோடிச்
செருமலைந்தார் சீற்றஞ் சிறந்து.

இ - ள். புலியினதுதிறலும் சிங்கமும் பொரும்யானையுமொப்பார், வலிமிக்க ற்றமும் அபிமானமும் பெருமையும்; ஆரவாரிக்கும் இட்டுதற்கரிய பகைப்புலவழி லே நிலைகொண்டார் வெட்சியாரென்னும் ஆரவாரத்தாற்கடுகிய பூசலைச்செய் ர், கோபமிக்கு. எ - று.

சிறந்து சேருமலைந்தாரென்க. (௪)

## புண்ணொடுவருதல்:—

மண்ணோடு புகழ்நிறீஇப்
புண்ணோடு தான்வந்தன்று.

இ - ள். பூமியுடனே இசையைநிறுத்தி ஆயுதம்பட்டபுண்ணுடனே வீரன்றுன் ந்தது. எ - று.

வ - று. வெங்குருதி மல்கு விழுப்புண் ணுகுதொறூஉ
மிங்குலிகஞ் சோரும் வரையேய்க்கும் - பைங்க
ணினம்போக்கி நின்ற நிகல்வாட்டி வேந்தன்
மனம்போல வந்த மகன்.

இ - ள். வெவ்விய உதிரம் மிக முகத்தினும்மார்பினும் பட்ட புண்ணினின் ம்விழவிழச் சாதிலிங்கஞ்சொரியும் வரையையொக்கும்; பைங்கண்ணினையுடைய சுவினத்தை முன்னேசெலுத்திநின்ற வெட்சியாருடைய மாறுபாட்டைக்கெடுத்து ன்னெஞ்சினையொப்ப வந்தவீரன். எ - று.

வீரன் இங்குலிகஞ்சோரும்வரையையொக்குமென்க.
வேந்தன்மனம் வெற்றியையேநினையும். (௫)

## போர்க்களத்தொழிதல்:—

படைக்கோடா விறன்மறவனைக்
கடைக்கொண்டு களத்தொழிந்தன்று.

இ - ள். பகைவராயுதத்திற்குப் புறங்கொடாத வெற்றியினையுடைய வீர ாக்கூட்டித் தான் பூசற்களரியிலேபட்டது. எ - று.

வ - று. உரைப்பி னதுவியப்போ வொன்னார்கைக் கொண்ட
நிரைப்பி னெடுந்தகை சென்றான் - புரைப்பின்
றுளப்பட்ட வாயெல்லா மொள்வாள் கவரக்
களப்பட்டான் றோன்றான் கரந்து.

இ - ள். சொல்லுவேமாயின் அஃது அதிசயமோ, பகைவர்கைப்பற்றின ரையின்பின்னே பெரிய மேம்பாட்டினையுடையவன்சென்றான்; ஒப்பின்றிக் கரு ப்பட்ட உடம்பிடமெல்லாம் ஒள்ளியவாள் கொள்ளைகொள்ளப் போர்க்களரியிலே ழுந்தான், ஒளித்துத் தோற்றுகிலன். எ - று.

'நிரைப்பி னெடுந்தகை சென்றான்' என்றது - இந்நாள்மீண்டநிரையென் றும் புகழுடனேசென்றானென்றல். (௬)

### ஆளெறிபிள்ளை :—

வருவாளை யெதிர்விலக்கி
யொருதானாகி யாளெறிந்தன்று.

இ - ள். பொருவாளை எதிர்விலக்கித் தானொருவனுமேயாகி வீரனைவெட்டியது. எ - று.

வ - று. பிள்ளை கடுப்பப் பிணம்பிறங்க வாளெறிந்து
கொள்ளைகொ ளாயந் தலைக்கொண்டா - ரெள்ளிப்
பொருதழிந்து மீளவும் பூங்கழலான் மீளா
னொருதனியே நின்றா னுளன்.

இ - ள். விலைவறியாதபிள்ளையையொப்பப் பிணம்பெருக்க வீரனைவெட்டி வெட்சியார்கொள்ளைகொண்ட ஆனிரையைக் கிட்டினார் இகழ்ந்துபூசற்செய்து கெட்டு மீண்டுபோதவும் மீளானாகித் தனியேநின்றான் ஒருபூங்கழலானுளன். எ-று.

### பிள்ளைத்தெளிவு :—

கண்மகிழ்ந்து துடிவிம்மப்
புண்மகிழ்ந்து புகன்றாடின்று.

இ - ள். துடியின்கண் மகிழ்ந்தொலிப்பத் தன்புண்ணைப் பிரியப்பட்டு விரும்பிக் கூத்தாடியது. எ - று

அதனைப் புகழ்ந்தாடியதூஉமாம்.

வ - று. மேவா ருயிருணங்க மேன்முடித்த பிள்ளையன்
பூவா ளுறைகழியாப் போர்க்களத்து - ளோவான்
றுடியிரட்டி விம்மத் தொடுகழலார் முன்னின்
றடியிரட்டித் திட்டாடு மாட்டு.

இ - ள். பகைவர் உயிருலரத் தலையினைநீக்கிக் கவந்தமாக்கிநின்ற பிள்ளைத் தன்மையை எய்தியவன் பொலிவினையுடையவாளினை உறைபினின்றும்வாங்கிப் பூசற்களரியிலேயொழியான் துடிகொட்டி ஆர்ப்பரவமிகக் கட்டியவீரக்கழலினையுடையார்முன்னேநின்று இட்டவடியின்மேல் அடியிட்டு ஆடுங்கூத்து. எ - று.

ஓவான் - ஒழியான்.

ஆட்டு ஓவானெனக. (அ)

### பிள்ளையாட்டு :—

கூடலர்குடர் மாலைசூட்டி
வேறிரித்து விரும்பியாடின்று.

இ - ள். பகைவர்குடராகியமாலையைச்சூட்டிக் கையிலே வேலைத்திருப்பிப் பிரியப்பட்டு ஆடியது. எ - று.

வ - று. மாட்டிய பிள்ளை மறவர் நிறந்திறந்து
கூட்டிய வெஃகங் குடர்மாலை - சூட்டியபின்
மாறிரியச் சீறி நுடங்குவான் கைக்கொண்ட
வேறிரிய விர்முந் துடி.

இ-ள். பகைவரை மாளப்பண்ணின பின்னைத்தன்மையை எய்தியவன், வீரருடைய மார்பங்களைத் திறந்து தெரிந்துபறித்தவேலைப் பகைவருடைய குடர்மாலையைச்சுற்றியபின் மாறுபாடுகெடக் கோபித்து ஆடுமவன் கைக்கொண்டவேலைத் திருப்பக் கறங்காநின்றது துடி. எ-று. (கூ)

## கையறுநிலை:—

வெருவரும் வாளமர் விளிந்தோற் கண்டு
கருவி மாக்கள் கையற வுரைத்தன்று.

இ-ள். அஞ்சத்தகும் வாட்பூசலிலே பட்டோனைப்பார்த்து யாழ்ப்பாணர் அவன்பட்டபடியைச் சொல்லியது. எ-று.

வ-று. நாப்புலவர் சொன்மாலை நண்ணார் படையுழக்கித்
தாப்புலி யொப்பத் தலைக்கொண்டான் - பூப்புனையு
நற்குலத்துட் டோன்றிய நல்லிசையாழ்த் தொல்புலவீர்
கற்கொலோ சோர்ந்திலவெங் கண்.

இ-ள். செந்நாப்புலவருடைய கீர்த்திமாலை, பகைவர்சேனையைத்துகைத்து வலியபுலியையொப்பப் பட்டான்; பொற்றாமரைப்பூவைச்சூடும் நல்லகுலத்திலே பிறந்த அழகிய இசையினையுடைய யாழாற்சிறந்த பழைய அறிவினையுடையீர், கல்லோ அறியோம் விழுந்தில, எம்முடையகண்கள். எ-று. (க0)

## நெடுமொழிகூறல்:—

மன்மேம் பட்ட மதிக்குடை யோற்குத்
தன்மேம் பாடு தானெடுத் துரைத்தன்று.

இ-ள். மன்னரின்மேம்பட்ட நிறைமதிபோலும் கொற்றக்குடையினையுடையோற்கு ஒருவீரன் தன்னுடையமேம்பாட்டைத் தான் உயர்த்திச்சொல்லியது. எ-று.

வ-று. ஆளமர் வெள்ளம் பெருகி னதுவிலக்கி
வாளொடு வைகுவேன் யானாக - நாளுங்
கழிமகிழ் வென்றிக் கழல்வெய்யோ யீயப்
*பிழிமது வுண்பார் பிறர்.

இ-ள். வீரராகிய போர்ப்பிரளயம் கைவளரின் அதனைவிலக்கி வாளுடனே அங்கேதங்குவேனாக யான், நாடோறும் மிக்க உவகையாற்சிறந்த வெற்றியினையும் வீரக்கழலினையுமுடைய வெய்யோனே, நீ கொடுப்ப நினைப்பு இயைந்து பிழியுமதுவை நுகர்வாராக, வேறுசிலர். எ-று.

உண்பாராக, பிறரெனத் தொழிற்படச்சொல்லுக. யான் வாளொடுவைக, உண்பார்பிறரென்றுமாம். (கக)

* பிழிமகி ழுண்பார் பிறர் என்றும் பாடம்.

## பிள்ளைப்பெயர்ச்சி :—

போர்தாங்கிப் புள்விலங்கியோனைத்
தார்வேந்தன் றலையளித்தன்று.

**இ - ள். புள்ளைவிலக்கிப் பூசலைத்தாங்கினவனை மாலையினையுடையமன்னன் றண்ணளிசெய்தது. எ - று.**

வ - று. பிணங்கமருட் பிள்ளை பெயர்ப்பப் பெயரா
தணங்கனுர்செய் தாளெறித னோக்கி - வணங்காச்
சிலையளித்த தோளான் சினவிடலைக் கன்றே
தலையளித்தான் றண்ணடையுந் தந்து

**இ - ள். மாறுபடும்பூசலிடத்துக் காரியென்னும்புள் விலக்கவும் விலங்காது ய்ப் பகைவரை வருத்துந்தன்பத்தைச்செய்து வீரரைவெட்டுதலைப்பார்த்து வளையாத மலையினையொத்ததோளான் செற்றத்தினையுடையவீரனுக்கு அற்றைநாளே வரிசைகொடுத்தான், மருதநிலம்பலவுங்கொடுத்து. எ - று.** (௧உ)

## வேத்தியன்மலிபு :—

தோள்வலிய வயவேந்தனை
வாள்வலிமறவர் சிறப்புரைத்தன்று.

**இ - ள். தோளால்வலிய மறமன்னனை வாளால்வலியவீரர் மேம்பாட்டினைச் சொல்லியது. எ - று.**

வ - று. அங்கையு ணெல்லி யதன்பய மாதலாற்
கொங்கலர் தாரான் குடைநிழற்கீழ்த் - தங்கிச்
செயிர்வழங்கும் வாளமருட் சென்றடையார் வேல்வா
யுயிர்வழங்கும் வாழ்க்கை யுறும்.

**இ - ள். உள்ளங்கைநெல்லிப்பழத்தினதுதன்மையாதலால், தேன்மலருமாலையினையுடையான் கொற்றக்குடைநிழலின்கீழே அவதரித்துக் *குற்றத்தினைக்கொடுக்கும் வாட்பூசலிலேபுக்குப் பகைவர்தம் வேலின் வாயிலே உயிரைக்கொடுக்குஞ் செல்வம், மிகவும் உறுதியுடைத்து. எ - று.**

**செல்வம், அதன்பயமாதலால், உறுதியுடைத்தென்க.** (௧௩)

## குடிநிலை :—

மண்டிணி ஞாலத்துத் தொன்மையு மறனுங்
கொண்டு பிறரறியுங் குடிவர வுரைத்தன்று.

**இ - ள். மண்செறிந்தபூமியிடத்துப் பழமையும் தறுகண்மையுமுட்கொண்டு பிறரறியும் குடியின்வரலாற்றினைச் சொல்லியது. எ - று.**

**மண்டிணிஞாலம் - மண்ணுலகு விண்ணுலகென்றாற்போலக்கொள்க.**

---

*** குரோதத்தினையென்றும் பிரதிபேதமுண்டு.**

[illegible] பொய்யகல நாளும் புகழ்விளைத்த லென்வியப்பாம்
வையகம் போர்த்த வயங்கொலிநீர் - கையகலக்
கற்றோன்றி மண்டோன்றாக் காலத்தே வாளோடு
முற்றோன்றி மூத்த குடி.

இ-ள். பொய்ம்மைநீங்க நாடோறும் கீர்த்தியுண்டாக்குதல், என்ன அதிசயமாம்! பூமியைமறைத்த தெளிந்துகறங்கும் உகாந்தவெள்ளம் விட்டுநீங்க, முற்பட மலைதோன்றிப் பூமிதோன்றாத அளவிலே வாளுடனே எல்லாரிலும் முற்பட மலையிடத்திலேதோன்றிப் பழையதாகிய குடி. எ-று.

குடி புகழ்விளைத்தல் என்னவியப்பாம்.

எவனென்பது - என்னெனக் குறைந்துநின்றது. மூத்தகுடியென்றது - பூசலிலே வாளாலே பட்டகுடியென்பாருமுளர். (கச)

கரந்தைத்திணைப்பாட்டு ஒன்றும் துறைப்பாட்டுப் பதின்மூன்றும் முடிந்தன.

இரண்டாவது

கரந்தைப்படலமுற்றிற்று.

---

மூன்றாவது

# வஞ்சிப்படலம்.

வாடா வஞ்சி வஞ்சி யரவங்
கூடார்ப் பிணிக்குங் குடைநிலை வாணிலை
கொற்றவை நிலையே கொற்ற வஞ்சி
குற்றமில் சிறப்பிற் கொற்ற வள்ளை
பேராண் வஞ்சி மாராய வஞ்சி
நெடுமொழி வஞ்சி முதுமொழி வஞ்சி
யுழுபுல வஞ்சி மழபுல வஞ்சி
கொடையின் வஞ்சி குறுவஞ் சியயே
யொருதனி நிலையொடு தழிஞ்சி பாசறை
பெருவஞ் சியயே பெருஞ்சோற்று நிலையொடு
நல்லிசை வஞ்சியென நாட்டினா தொகுத்த
வெஞ்சாச் சீர்த்தி யிருபத் தொன்றும்
வஞ்சியும் வஞ்சித் துறையு மாகும்.

எ-ன், வஞ்சித்திணையும் துறையுமாமாறு உணர்த்துதனுதலிற்று.

இ - ள். வஞ்சி, வஞ்சியரவம், குடைநிலை, வாணிலை, கொற்றவைநிலை, கொற்றவஞ்சி, கொற்றவள்ளை, பேராண்வஞ்சி, மாராயவஞ்சி, நெடுமொழிவஞ்சி, முதுமொழிவஞ்சி, உழபுலவஞ்சி, மழபுலவஞ்சி, கொடைவஞ்சி, குறுவஞ்சி, ஒருதனிநிலை, தழிஞ்சி, பாசறைவஞ்சி, பெருவஞ்சி, பெருஞ்சோற்றுநிலை, நல்லிசைவஞ்சி என இவை இருபத்தொன்றும் வஞ்சித்திணையும் துறையுமாம். எ - று.

## வ ஞ் சி :—

வாடாவஞ்சி தலைமலைந்து
கூடார்மண் கொளல்குறித்தன்று.

இ - ள். தோலாதவஞ்சியைத் தலையிலேசூடிப் பகைவர்பூமியைக் கொள்கையைக் கருதியது. எ - று.

வ - று. செங்கண் மழவிடையிற் றண்டிச் சிலைமறவர்
வெங்கண் மகிழ்ந்து விழவமர - வங்குழைய
வஞ்சி வணங்கார் வணக்கிய வண்டார்ப்பக்
குஞ்சி மலைந்தானெங் கோ.

இ - ள். சிவந்தகண்ணினையுடைய இளமைப்பருவத்து ஆனேற்றைறயொப்ப மிகைத்தெழுந்து வில்லினையுடையவீரர் வெவ்வியமதுவையருந்தி வில்விழாவை விரும்ப, அழகிய தளிரினையுடையவஞ்சியைத் தன்னைப்பணியாதாரைப் பணிவிப்பான்வேண்டிச் சுரும்பு ஆரவாரிப்ப மயிரிலேசூடினான், எம்முடைய வேந்து. எ-று.
வணங்காரைவணக்கிய வேந்தசூடினனென்க. (க)

## வஞ்சியரவம் :—

வல்வார் முரசமொடு வயக்களிறு முழங்க
வொள்வாட் டானை யுருத்தெழுந் தன்று.

இ - ள். வலியினையுடைய வாராலேவிசித்த வீரமுரசுடனே வலிய யானை முழங்க அழகிய வாளினையுடைய சேனை கோபித்துக் கிளர்ந்தது. எ - று.

வ - று. பௌவம் பணைமுழங்கப் பற்றார்மண் பாழாக
வௌவிய வஞ்சி வலம்புனையச் - செவ்வே
லொளிறும் படைநடுவ ணூழித்தீ யன்ன
களிறுங் களித்ததிருங் கார்.

இ - ள். கடல்போல வீரமுரசம் ஆர்ப்பப் பகைவர்நிலம் அழியக் கைப்பற்றின வஞ்சியை வெற்றியாகச்சூடச் சிவந்தவேல் விட்டுவிளங்கும் சேனைநடுவே யுகாந்தத்து நெருப்பையொத்த யானையும் மகிழ்ந்துமுழங்காநின்றது, மேகத்தைப்போல. எ - று.
உம்மை - சிறப்பும்மை. (உ)

## கு டை நி லை :—

பெய்தாமஞ் சுரும்பிமிரப் பெரும்புலவர் புகழ்பாடக்
கொய்தார் மன்னவன் குடைநாட் கொண்டன்று.

இ-ள். தன்மேலிட்டமாலையிலே வண்டுகளொலிப்ப மிக்க அறிவினையுடையோர் கீர்த்தியைச்சொல்லக் கத்தரிகையால் மட்டஞ்செய்த மாலையினையுடைய வேந்தன் குடையைப் புறவீடுவிட்டது. எ - று.

வ - று. மூன்னார் முரசிரங்க மூரிக்கடற் றானைத்
துன்னருந் துப்பிற் றொழுதெழா - மன்னர்
ருடைநா ளுலந்தனவா லோதநீர் வேலிக்
குடைநா ளிறைவன் கொள.

இ - ள். தன்முன்னே வீரமுரசுமுழங்கப் பெரியகடல்போன்ற சேனையினையும் கிட்டுதற்கரிய வலியினையுமுடையராய்ப் பணிந்தெழாத வேந்தர்தம்முடைய வாணாள் கெட்டன; திரைமிகுந்தகடலை வேலியாகவுடைய பூமியிடத்து, குடையை அரசன் புறவீடுவிட. எ - று.
புறவீடுவிட உடைநாளுலந்தனவென்க.
ஆல் - அசை.

வாணிலை :—

செற்றார்மேற் செலவமர்ந்து
கொற்றவாணாட் கொண்டன்று.

இ - ள். பகைவர்மேல் எடுத்துவிடுதலைவிரும்பி வெற்றியினையுடைய வாளை புறவீடுவிட்டது. எ - று.

வ - று. அறிந்தவ ராய்ந்தநா ளாழித்தேர் மன்ன
னெறிந்தில கொள்வா ளியக்க - மறிந்திரவிப்
பின்பகலே யன்றியும் பேணா ரகநாட்டு
நன்பகலுங் கூகை நகும்.

இ - ள். சோதிடநூல்வல்லவாதெரிந்தநாளிலே வட்டக்காலாற்சிறந்த தேரினையுடையவேந்தன் வெட்டிவிளங்கும் அழகிய வாளினது புறவீடுவிடுதலையுணர்ந்து மாறுபட்டு உச்சிக்குப் பின்பன்றியும் பகைவருண்ணாட்டிடத்து உச்சிப்பொழுதும் கோட்டான் பாடாநிற்கும். எ - று. (௪)

கொற்றவைநிலை :—

நீடோளான் வென்றிகொள்கென நிறைமண்டை வலனுயரிக்
கூடாரைப் புறங்காணுங் கொற்றவைநிலை யுரைத்தன்று.

இ - ள். நீண்டதோளினையுடையவன் வெற்றிபெறுவானாகவெனச்சொல்லி நல்லபொருள்களால்நிரம்பிய பாத்திரத்தை வெற்றியாகவெடுத்து அரசனுடைய பகைவரை முதுபுறங்காணும் துர்க்காதேவிநிலைமையைச் சொல்லியது. எ - று.

வ - று. அணங்குடை நோலை பொரிபுழுக்கல் பிண்டி
நிணங்குடர் நெய்த்தோர் நிறைத்துக் - சணம்புகலக்
கையிரீஇ மண்டை கணமோடி காவலற்கு
மொய்யிரியத் தான்முந் துறும்.

இ - ள். தெய்வத்திற்குரித்தான *எட்கசிவும் நெற்பொரியும் அவலூர்துவரை [தருப்பணமும்] நிணமும் குடரும் உதிரமுநிறைவித்துத் திரட்சிவிரும்பக் கையிலே பாத்திரத்தையிருத்திப் பூதகணங்களையுடைய துர்க்காதேவி வேந்தற்குப் பகை கெடத் தான் முன்னே எழுந்தருளும். எ - று. (௫)

இதுவுமது.

மைந்துடை யாடவர் செய்தொழில் கூறனு
மந்தமில் புலவ ரதுவென மொழிப.

இ - ள். வலியினையுடையவீரர் செய்யுந்தொழிலைச்சொல்லுதலும் முடிவில்லாத அறிவினையுடையோர் அத்துறையென்றுசொல்லுவர். எ - று.

வ - று. தமருட் டலையாத ருர்தாங்கி நிற்ற
லெமருள்யா மின்னமென் றெண்ண - லெரிின்
முடுகழலின் முந்துறுதன் முல்லைத்தார் வேந்தன்
றொடுகழன் மைந்தர் தொழில்.

இ - ள். தம்முடையசுற்றத்தாரின்மேலாகுதல் தூசிப்படையைத்தடுத்துநிற்றல், எங்கள்படைவீரருள் யாம் இன்னதன்மையேமென்றெண்ணுதல், போரிடத்து விரைந்துசெல்லுநெருப்புப்போல முற்படப்புகுதல், முல்லைத்தாரினையுடையமன்னனுடைய கட்டும்வீரக்கழலினையுடைய வீரர்செய்தி. எ - று.

முல்லைத்தார்கூறியது, †"வஞ்சிதானே முல்லையது புறனே" என்றதனால்.(௬)

## கொற்றவஞ்சி:—

வையகம் வணங்க வாளோச் சினனெனச்
செய்கழல் வேந்தன் சீர்மிகுத் தன்று.

இ - ள். உலகத்துள்ளாரெல்லாருந்தொழ வாளாலே வெட்டினனெனச்சொல்லிப் பண்ணின வீரக்கழலினையுடைய அரசனதுதன்மையைப் பெருக்கச்சொல்லியது. எ - று.

வ - று. அழலடைந்த மன்றத் தலந்தபாரா நின்றார்
நிழலடைந்தே நின்னையென் றேத்திக் - கழலடையச்
செற்றங்கொண் டாடிச் சிலைத்தெழுந்தார் வீந்தவியக்
கொற்றங்கொண் டெஃகுயர்த்தான் கோ.

இ - ள். நெருப்புப்பொருந்திய பகைவர்நாட்டுஅம்பலத்து நொந்துஅழியாநின்றவர் நின்னை நிழலாகச்சேர்ந்தேமென்று புகழ்ந்து சீபாதத்தைவந்துசேரச் சினத்தைப்பாராட்டிக் கோபித்துவந்தார் பட்டுத் தம்பெயர்கெட வெற்றியைப்பெற்று வேலை வலமாக உயர்த்தான், வேந்து. எ - று. (௭)

---

* 'கோலையென்னுஞ்சொற்கு எட்கசிவென்றது - பின்மொழியாகுபெயராய் நின்ற பண்புத்தொகையாதலிற் கள்ளென்னும்பொருட்டு' என்று சிலபிரதியில் எழுதப்பட்டிருக்கின்றது.

† தொல்காப்பியம், சொல்லதிகாரம், புறத்திணையியல், ௬.

## கொற்றவள்ளை :—

மன்னவன் புகழ்கிளந்
தொன்னார்நா டழிபிரங்கின்று.

இ - ள். அரசன்கீர்த்தியைச்சொல்லிப் பகைவர்தேசம் கெடுவதற்கு வருந்தியது. எ - று.

வ - று தாழார மார்பினோன் றாமரைக்கண் சேந்தனவாற்
பாழாய்ப் பரிய விளிவதுகொல் - யாழாய்ப்
புடைத்தேனிமிர்சுண்ணிப் பூங்கட் புதல்வர்
நடைத்தேரொலிகறங்கு நாடு.

இ - ள். ஆரந்தாழ்ந்தமார்பினையுடையவன் தாமரைமலர்போன்ற கண்கள் சிவந்தன, பாழாய்க் கண்டாரிரங்கக் கெடும்போலும்; யாழையொப்பமுரன்று பக்கத்திலே வண்டுகள் ஆர்க்குமாலையினையும் பொலிவினையுடைய கண்ணினையுமுடைய மைந்தர்சிறுதேரோசை ஆரவாரிக்கும்நாடு. எ - று.

நாடு பாழாய்ப்பரிய விளிவதுகொலென்க. (அ)

## பேராண்வஞ்சி :—

கேளல்லார் முனைகெடுத்த
மீளியாளர்க்கு மிகவுய்த்தன்று.

இ - ள். உறவல்லாதார் பொரும் செருவைத்தொலைத்த தலைமையையுடைய வீரர்க்குப் பெரிதுங்கொடுத்தது. எ - று.

வ - று. பலிபெறு நன்னகரும் பள்ளி யிடனு
மொலிகெழு நான்மறையோ ரில்லு - நலிவொரீஇப்
புல்லா ரிரியப் பொருதார் முனைகெடுத்த
வில்லார்க் கருள்சுரந்தான் வேந்து.

இ - ள். பலியிடும் நல்லகோயில்களும் துறந்தாரிருக்கும் பள்ளியிடங்களும் ஓசைபொருந்திய நான்குவேதத்தோர் அகமும் நெருக்குதலையொழிந்து பொருந்தாதார் கெட்டோடப் பொருதவீரர்செருவைவென்ற தன்னுடையவில்லாளர்க்கு உபகாரம்பண்ணினான், மன்னன். எ - று. (கூ)

### இதுவுமது.

அருந்திறை யளப்ப வாறிய சினத்தொடு
பெரும்பூண் மன்னவன் பெயர்தலு மதுவே.

இ - ள். பெறுதற்கரியபொருளைப் பகைவர்கொடுப்பத் தணிந்தகோபத்தோடு பேரணிகலங்களையுடையமன்னன் மீண்டுபோதலும் அத்துறையாம். எ - று.

வ - று. கூடி முரசிரங்கக் கொய்யுளைமா முன்னுகளப்
பாடி பெயர்ந்திட்டான் பல்வேலான் - கோடி
நிதியந் திறையளந்தார் நேராருந் தன்கீழ்
முதியமென் றூறி முரண்.

இ - ள். பலவாச்சியத்தோமெம்பொருந்தி முரசுஅதிரக் கைக்கத்தரிவிட்டு க்கின தலையாட்டத்தினையுடைய பரிகள் முன்னே சதியாகநடக்க இருந்த சறையினைவிட்டுப் பெயர்ந்தான், வேற்படையினையுடையான்; கோடிபொருளைத் றையாக இவனுக்குப் பகைவருங்கொடுத்தார், அரசன்றன் அடிக்கீழ்ப் பழை ாமென்றுசொல்லி மாறுபாடொழிந்து. எ - று.

மாறுபாடொழிந்து கோடிநிதியம் திறையளந்தார் நேராருமென்க. (௧0)

## மாராயவஞ்சி:—

மறவேந்தனிற் சிறப்பெய்திய
விறல்வேலோர் நிலையுரைத்தன்று.

இ - ள். மாற்சரியத்தினையுடையமன்னனாலே சிறப்புப்பெற்ற வெற்றிமிக்க வலியினையுடையோர் நிலைமையைச்சொல்லியது. எ - று.

வ - று. நேராரம் பூண்ட நெடுந்தகை நேர்கழலான்
சேரார் முனைநோக்கிக் கண்சிவப்பப் - போரார்
நறவேய் கமழ்தெரிய லண்ணன் செறிந்த
மறவே விலைமுகந்த மார்பு.

இ - ள். இனமொத்த முத்தாரங்களையணிந்தன; பெரிய மேம்பாட்டினையும் பொருந்திய வீரக்கழலினையுமுடையான் பகைவர்தம் போரைப்பார்த்துக் கோபித்துக் கண்சிவப்பப் போர்வீரர் தேன்மேவிய நாறுமாலையினையுடைய சத்துருக்க ளறிந்த மாற்சரியத்தாலேமிக்க இலைத்தொழிலையுடைய வேலை ஏற்றுக்கொண்ட ார்புகள். எ - று.

மறவேவிலைமுகந்த போராரார்மார்பு நேராரம்பூண்டனவென்க. இனி நேராரம் ண்ட போராரார்மார்பு மறவேவிலைமுகந்தனவென்றலுமொன்று. (௧௧)

## நெடுமொழிவஞ்சி:—

ஒன்னார் படைகெழுமித்
தன்னாண்மை யெடுத்துரைத்தன்று.

இ - ள். பகைவர்தஞ்சேனையைக்கிட்டித் தன்னுடைய ஆண்மைத்தன்மை ய உயர்த்திச்சொல்லியது. எ - று.

வ - று. இன்ன ரெனவேண்டா வென்னோ டெதிர்சீறி
முன்னர் வருக முரணகலு - மன்னர்
பருந்தார் படையமருட் பல்லார் புகழ
விருந்தா யடைகுறுவார் விண்.

இ - ள். இன்னதன்மையாரென்று சொல்லவேண்டா; என்னுடனேகோ த்து என்முன்னேபொரவருக, மாறுபாட்டினைமிகுக்கும்வேந்தர்; பருந்துநிறை ம் தானைப்போரிடத்துப் பலரும்போற்ற வீரசுவர்க்கத்திற்குப் புதியராய் அதனிற் ட்டுதலைப்பெறுவார்கள். எ - று. (௧௨)

## முதுமொழிவஞ்சி:—

தொன்மரபின் வாட்குடியின்
முன்னோனது நிலைகிளந்தன்று.

இ - ள். பழையவரலாற்றினையும் வாளினையுமுடைய மறக்குடியில் *தன் அப்பனுடையநிலைமையைச் சொல்லியது. எ - று.

வ - று. குளிறு முரசங் குணில்பாயக் கூடா
ரொளிறுவாள் வெள்ள முழக்கிக் - களிறெறிந்து
புண்ணொடு வந்தான் புதல்வற்குப் பூங்கழலோய்
தண்ணடை நல்க றகும்

இ - ள். முழங்கும்வீரமுரசிலேகடிப்புத்தாக்கப் பகைவருடைய விட்டுவிளங்கும் வாள்வெள்ளத்தைத் துகைத்து யானையைவெட்டிப் புண்ணுடனேவந்தவனுடைய மகனுக்குப் பொலிந்த வீரக்கழலினையுடையோய், மருதநிலங்களைக்கொடுத்தல் தக்கதாம். எ - று.

மகனென்றமையால் அவன்றன் அப்பன்பட்டமை விளங்கும். (கரு)

## உழபுலவஞ்சி:—

நேராதார் வளநாட்டைக்
கூரெரி கொளீஇயன்று.

இ - ள். பொருந்தாதாருடைய நல்ல தேசத்தை மிக்க நெருப்பைக்கொளுத்தியது. எ - று

வ - று. அயிலன்ன கண்புதைத் தஞ்சி யலறி
மயிலன்னார் மன்றம படாக் - குயிலகவ
வாடிரிய வண்டிமிருஞ் செம்ம லடையார்நாட்
டோடெரியுள் வைகின வூர்.

இ - ள். வேலையொத்த விழியைப்புதைத்துப் பயப்பட்டுக் கூப்பிட்டு மயிலையொத்தகுலமகளிர் மன்றென்றுபாராதேசெல்ல, குயில் பாட வாளுலாவச் சுரும்பு ஒலிக்குந் தலைமையினையுடைய பகைவர்தேசத்து ஊர்கள், பரந்தோடும் நெருப்பினுள்ளே அவதரித்தன. எ - று. (கசு)

## மழபுலவஞ்சி:—

கூடார்முனை கொள்ளைசாற்றி
வீடறக்கவர்ந்த வினைமொழிந்தன்று.

இ - ள். பகைவர் வேற்றுப்புலத்தைக் கொள்ளையூட்டி அகங்கள்பாழ்படக் கொள்ளைகொண்டதொழிலைச் சொல்லியது. எ - று.

---

* தமப்பனுடையவென்றும் பிரதிபேதமுண்டு.

வ - று. களமர் கதிர்மணி காலேகஞ் செம்பொன்
வளமனை பாழாக வாரிக் - கொளன்மலிந்து
கண்ணார் சிலையார் கவர்ந்தார் கழல்வேந்த
னண்ணார் கிளையலற நாடு.

இ - ள். அடியாரையும் ஒளிவிடும் வயிர அரதனங்களையும் முத்தினையும் சிவந்த பொன்னினையும் அழகிய அகங்களெல்லாம் வறியவாகத் திரட்டிக் கைப்பற்றிக் கொள்ளும்வகைமிக்குக் கண்ணுக்குநிறைந்தவில்லாளர் கொள்ளைகொண்டார், வீரக் கழலினையுடைய அரசன்றன் பகைவர்சுற்றமிரங்க அவருடையநாட்டை. எ - று. நாடு கண்ணார்சிலையார் கவர்ந்தாரெனக. (௧௫)

## கொடைவஞ்சி:—

நீடவுங் குறுகவு நிவப்பவுந் தூக்கிப்
பாடிய புலவர்க்குப் பரிசி னீட்டின்று.

இ - ள். உச்சமாகவும் மந்தமாகவும் அதன்மேற் சமமாகவும் இசையை அளந்து பாடின அறிஞர்க்குப் பரிசிலைக்கொடுத்தது. எ - று.

செந்தூக்குமுதலான எழுவகைத்தூக்கினுளுந்தூக்கியென்றுமாம். ஈண்டு நிவப்பவென்றது - மந்தத்திலே ஓங்கியசமத்தை. "ஒருசீர் செந்தூக் கிருசீர் மதலை, முச்சீர் கோயி னாற்சீர் துணிவே, யைஞ்சீர் நிவப்பே யறுசீர் தழாஅல், எழுசீர் நாளொடுந் தூக்கென மொழிப" என்றாராகலின்.

வ - று. சுற்றிய சுற்ற முடன்மயங்கித் தம்வயி
றெற்றி மடவா ரிரிந்தோட - முற்றிக்
குரிசி லடையாரைக் கொண்டகூட் டெல்லாம்
பரிசின் முகந்தன பாண்.

இ - ள் சூழ்ந்த பெருங்கிளை ஒக்கக் கலங்கித் தத்தம்வயிற்றிலே அடித்துக் கொண்டு மகளிர் கெட்டோடப் பகைவர்நாட்டைவளைத்துத் தலைவன் சத்துருக் களைப் பறித்துக்கொண்ட பொருண்முழுதும் தாம்பெறும் பேறாக முகந்துகொண் டன, பாண்கிளை. எ - று. (௧௬)

## குறுவஞ்சி:—

மடுத்தெழுந்த மறவேந்தர்க்குக்
கொடுத்தளித்துக் குடியோம்பின்று.

இ- ள். மண்டி எதிர்ந்த வீரத்தையுடைய மன்னர்க்குத் திறையைக்கொடுத்து, நாடுடைய அரசன் குடிகளுக் தண்ணளிபண்ணிக் காத்தது. எ - று.

வ - று. தாட்டாழ் தடக்கைத் தனிமதி வெண்குடையான்
வாட்டானை வெள்ளம் வரவஞ்சி - மீட்டான்
மலையா மறமன்னன் மால்வரையே போலுங்
கொலையானை பாய்மாக் கொடுத்து.

இ - ள். தாளிலேதாழநீண்ட பெரியகையினையும் ஒப்பில்லாத மதியினை யொத்த கொற்றக்குடையினையுமுடையான் வாளினையுடைய சேனைவெள்ளம்

தங்கள்நாட்டின்வருதற்குஅஞ்சி விலக்கினான்; எதிர்க்கமாட்டாத மாற்சரியத்தினையுடையவேந்தன், பெரியமலையினையொக்கும் கொலையானையினையும் சதிபாயும் குதிரையினையுங் கொடுத்து. எ - று,

கொடுத்துமீட்டானென்க. (கஎ)

இதுவுமது.

கட்டூர் நுவலைகூறினு
மத்துறைக் குரித்தாகும்.

இ - ள். விட்டிருக்கும் பாசறையினது கூறுபாட்டைச்சொல்லினும் முற்பட்ட குறவஞ்சிக்கு உரிமையுடைத்து. எ - று.

வ - று. அவிழ்மலர்க் கோதைய ராட வொருபா
லிமிழ்முழவம் யாழோ டியம்பக் - கவிழ்மணிய
காய்கடா யானை யொருபாற் களித்ததிரு
மாய்கழலான் கட்டூ ரகத்து.

இ - ள். மலர்ந்தபூவாற்சிறந்த மாலையினையுடைய மகளிர் கூத்தாட ஒருபக்கத்திலே முழங்காநின்ற முழவம் யாழுடனேஆரவாரிப்பப் பக்கத்திலே கவிழ்ந்த மணியினையுடைய சிறப்பட்ட மதத்தினையுடையயானை ஒருபால் மகிழ்ந்துமுழங்கும், மேலாக நல்லோர்தெரிந்த வீரக்கழலினையுடையான் விட்டிருந்த பாசறையிடத்து. எ - று. (க௮)

ஒருதனிநிலை:—

பொருபடையுட் கற்சிறைபோன்
றொருவன்றாங்கிய நிலையுரைத்தன்று.

இ - ள். போரினைச்செய்யும் சேனையிடத்து வெள்ளம்தள்ளாதபடி கல்லாற்கட்டின கரையேபோலப் பெரும்படையை ஒருவீரன்தடுத்த நிலையைச்சொல்லியது. எ - று.

வ - று. வீடுணர்ந் தோர்க்கும் வியப்பாமா லிந்நின்ற
வாடன்முதியாள் வயிற்றிடங் - கூடார்
பெரும்படை வெள்ள நெரிதரவும் போகா
விரும்புலி சேர்ந்த விடம்.

இ - ள். முத்தியினை அறிந்து எல்லாப்பற்றுமற்றோர்க்கும் அற்புதமாம்: இவ்விடத்துநின்ற பொலிவழிந்த தன்மையினையுடைய கிழவிதன் மடியகம்; பகைவர் அளவிறந்தசேனை நெருக்கிவந்துமேலிடவும் நின்றநிலையினின்றுநீங்காத பெரிய புலியனையான்கிடந்தஇடம். எ - று.

ஆல் - அசை; சொல்விழுக்காடாயினுமாம். (கக)

தழிஞ்சி:—

அழிகுநர் புறக்கொடை யயில்வா ளோச்சாக்
கழிதறு கண்மை காதலித் துரைத்தன்று.

இ - ள். ஒருவீரன் தனக்குக் கெட்டோவோர் முதுகுபுறத்துக் கூரிய பாளோச்சாத மிக்க மறப்பண்பை விரும்பிச்சொல்லியது. எ - று.

வ - று. கான்படு தீயிற் கலவார்தன் மேல்வரினுந்
தான்படை தீண்டாத் தறுகண்ணன் - வான்படர்தல்
கண்ணியபி னன்றிக் கறுத்தார் மறங்தொலைத
*லெண்ணியபின் போக்குமோ வெஃகு.

இ - ள். காட்டிலேதோற்றின நெருப்புப்போலப் பகைவர் தன்னை மீதூர்ந்து வந்தாலும் ஆயுதந்தொடாத மறவன்றான், பகைவர் சுவர்க்கலோகத்தேபோதலைக் கருதி எதிரினல்லது அவ்வெகுண்டோர் முதுகிடுதல்கருதியபின்பு ஒக்குவதோ வாளினை. எ - று. (உ௰)

## பாசறைநிலை:—

மதிக்குடைக்கீழ் வழிமொழிந்து மன்னரெல்லா மறந்துறப்பவும்
பதிப்பெயரான் மறவேந்தன் பாசறை யிருந்தன்று.

இ - ள். நிறைமதிபோன்ற கொற்றக்குடையின்கீழே தாழ்வுசொல்லி வேந்தர்பலரும் மாற்சரியத்தைவிட்டவும் அவ்விடத்தினின்றும் போகானாகி மறத்தினையுடையமன்னன் பாடிவீட்டிலே இருந்தது. எ - று.

வ - று. கரும்பொடு காய்நெற் கனையெரி யூட்டிப்
பெரும்புனல் வாய்திறந்த பின்னுஞ் - சுரும்பின்
றொகைமலிந்த தண்குவளைத் தூமலர்த் தாரான்
பகைமெலியப் பாசறையு ளான்.

இ - ள். கரும்பினையும் காய்த்தநெல்லினையும் முழங்குநெருப்பினை உண்ணப் பண்ணுவித்துப் பெரியநீர்நிலைகள்பலவும் உடைத்தபின்னும் வண்டின்கூட்டமிக்க குளிர்ந்த செங்கழுநீர்த் தூய்தானபூவாற்செய்த மாலையினையுடையோன் சத்துருக்கள்பொலிவழிய விட்ட படைவீட்டிலேயிருந்தான். எ - று. (உ௧)

## பெருவஞ்சி:—

முன்னடையார் வளநாட்டைப்
பின்னருமுடன் றெரிகொளீஇயன்று.

இ - ள். தன்னுடையமுன்னேவந்து செறியாதார் நல்லதேசத்தைப் பின்பும் கோபித்து நெருப்பைக் கொளுத்தியது. எ - று.

வ - று. பீடிலா மன்னர் நடுங்கப் பெரும்புகை
யூடிலாய் வானத் தொளிமறைப்ப - நாடெலாம்
பின்னும் பிறங்கழல் வேய்ந்தன பெய்கழற்கான்
மன்னன் கனல மறம்.

---

* எண்ணியபினேக்குமோவெனவும் பாடம்.

இ - ள். பெருமைபார்த்தமன்னர்துளங்கப் பெரியதுாமம் உலவெடலாவி ஆகாயத்தின்கண் விளக்கத்தினைமறைப்பத் தேயமுழுதும் இரண்டாவதும் மிக்கநெருப்பு மூட்டப்பட்டன, காலிலேயிட்ட வீரக்கழலினையுடைய அரசனுடைய சினம் மூள்கையாலே. எ - று. (உஉ)

## பெருஞ்சோற்றுநிலை :—

திருந்தார் தெம்முனை தெறுகுவ ரிவரெனப்
பெருஞ்சோ றுடவர் பெறுமுறை வகுத்தன்று.

இ - ள். பகைவர்வேற்றுப்புலத்தை நமக்கு அழித்துத்தருவரிவரென்றுசொல்லி மிக்கசோற்றை வீரர்கொளளும்வகையிலேகொடுத்தது. எ - று.

வ - று. இயவர் புகழ வெறிமுர சார்ப்பக்
குயவரி வேங்கை யனைய - வயவர்
பெறுமுறையாற் பிண்டங்கோ ளேவினன் பேரா
ரிறுமுறையா லெண்ணி யிறை.

இ - ள். அரசன் வாச்சியக்காரர் துதிப்பக் கொட்டும்வீரமுரசுமுழங்க அரிவாளேபோன்ற வரியினையுடைய புலியையொத்த வீரர்பெறும்படியே சோற்றுத்திரளையைக் கொள்கையை ஏவினன் ; பகைவர்படும்வகையால் விசாரித்து, அரசன். எ - று. (உங)

## நல்லிசைவஞ்சி :—

ஒன்னார் முனைகெடவிறுத்த
வென்வேலாடவன் விறன்மிகுத்தன்று.

இ - ள். சத்துருக்கள் வேற்றுப்புலம் அழியவிட்ட வென்றிவேலினையுடையவன் வெற்றியைச்சொல்லியது. எ - று.

வ - று. மடங்கலிற் சீறி மலைத்தெழுந்தார் மண்மே
லிடங்கெடச் சென்றிறுத்த பின்னு - நுடங்கெரிபோல்
வெல்லப் பெருகும் படையாற்கு வேந்தர்மேற்
செல்லப் பெருகுஞ் சினம்.

இ - ள். சிங்கம்போற்கோபித்து மாறுபட்டெதிர்ந்தார் நிலத்தின் மேல் வெளிதூரப் படையெடுத்துப்போய் விட்டபின்பும் அசைந்தெரியுநெருப்புப்போலச் சயிக்கவளரும்சேனையினையுடைய அரசனுக்குப் பகைமன்னாமேல் எடுத்துச் செல்ல மிகாநிற்கும், கோபம். எ - று.

வென்றோர் விளக்கங்கூறியது. (உச)

இதுவுமது,

இறுத்தபி னழிபிரங்கன்
மறுத்துரைப்பினு மத்துறையாகும்.

இ - ள். எடுத்துவிட்டபின்பு பகைவர்தேசத்துக்கேட்டை இரங்கலை அழித்துச்சொல்லினும் முன்புசொன்னதுறையேயாம். எ - று.

வ - ள. குனையழன் மண்டிய கோடுயர் மாடஞ்
*சுனையொடுபேய்ப் பீர்க்குஞ் சுமந்த - நிரைதிண்டேர்ப்
பல்லிசை வென்றிப் படைக்கடலான் சென்றிறுப்ப
நல்லிசை கொண்டடையார் நாடு.

இ - ள். ஆரவாரமுடைய நெருப்புக்கொளுத்தின மலையையொப்ப ஓங்கின மாளிகையெல்லாம் பேய்ச்சுனையும் பேய்ப்பீர்க்கும் மேற்கொண்டன; ஒழுங்குபட்ட திண்ணியதேரினையும் பலகீர்த்தியாற்சிறந்த வென்றியினையும் சேனையாகிய கடலையுமுடையான்போய் எடுத்துவிட, நல்லபுகழைச்சொல்லி இவனைக்கூடாதார் தேயம். எ - று.

நாடு சுனையொடு பேய்ப்பீர்க்குஞ்சுமந்தவென்க.
கொற்றவள்ளை இவ்வாறன்று. (உரு)

மூன்றாவது
வஞ்சிப்படலம் முற்றிற்று.

---

நான்காவது

# காஞ்சிப்படலம்.

காஞ்சி காஞ்சி யெதிர்வே தழிஞ்சி
பெரும்படை வழக்கொடு பெருங்காஞ் சியே
வாள்செல வென்று குடையது செலவே
வஞ்சினக் காஞ்சி பூக்கொ ணிலையே
புகழ்த்தலைக் காஞ்சி தலைமா ராயந்
தலையொடு முடிதன் மறப்பெயர்க் காஞ்சி
மாற்றரும் பேய்நிலை பேய்க்காஞ் சியே
தொட்ட காஞ்சி தொடாககாஞ் சியே
மன்னைக் காஞ்சி கட்காஞ் சியே
யாஞ்சிக் காஞ்சி மகட்பாற் காஞ்சி
முனைகடி முன்னிருப் புளப்படத் தொகைஇ
யெண்ணிய வகையா னிருபத் திரண்டுங்
கண்ணிய காஞ்சித் துறையென மொழிப.

எ - ன், காஞ்சித்திணையும் துறையுமாமாறு உணர்த்துதனுதலிற்று.

இ - ள். காஞ்சி, காஞ்சியெதிர்வு, தழிஞ்சி, படைவழக்கு, பெருங்காஞ்சி, வாள்செலவு, குடைச்செலவு, வஞ்சினக்காஞ்சி, பூக்கொணிலை, தலைக்காஞ்சி, தலை

---

*சுனையொடு பீரஞ்சுமந்த வென்றும் பாடம்.

மாராயம், தலையொடுமுடிதல், மறக்காஞ்சி, பேய்நிலை, பேய்க்காஞ்சி, தொட்டகாஞ்சி, தொடாக்காஞ்சி, மன்னைக்காஞ்சி, கட்காஞ்சி, ஆஞ்சிக்காஞ்சி, மகட்பாற்காஞ்சி, முனைகடிமுன்னிருப்பு என இவை இருபத்திரண்டும் காஞ்சித்திணையும் துறையுமாம். எ - று.

## காஞ்சி:—

*வெஞ்சின மாற்றான் விடுதர வேந்தன்
காஞ்சி சூடிக் கடிமனை கருதின்று.

இ - ள். வெவ்வியசினத்தையுடைய வேற்றுமன்னன்வந்துவிட அரசன் காஞ்சியென்னும்பூவைமலைந்து காவலிடத்தைக் காக்கநினைந்தது. எ - று.

வ - று. அருவரை பாய்ந்திறுது மென்பார்பண் டின்றிப்
பெருவரைச் சீறூர் கருதிச் - செருவெய்யோன்
காஞ்சி மலையக் கடைக்கணித்து நிற்பதோ
தோஞ்செய் மறவர் தொழில்.

இ - ள். செருமுனையிற் படப் பொருவாரில்லாதபடியாலே முன் பெறுதற்கரிய மலையேறிவிழுந்தாலும் சாவேமென்னும்வீரர் இக்காலம் இப்பெரியமலையிடத்துச் சீறூரைக் காப்பான்வேண்டி நினைந்து பூசல்விருப்பத்தையுடையோன் காஞ்சிப்பூவைச்சூட [அணியிட்டு]நிற்குமதுவோ, குற்றத்தைப் பண்ணும் வீரர்வினை எ - று.

ஓகாரம் - எதிர்மறை. (க)

## காஞ்சியெதிர்வு:—

மேல்வரும் படைவர மிகவு மாற்றா
வேல்வ லாடவன் விறன்மிகுத் தன்று.

இ - ள். எதிருன்றுஞ்சேனை மேலிடுதலைப் பொறாத வேற்றொழிலைவல்ல வீரனுடைய வெற்றியை மிகுத்துச்சொல்லியது. எ - று.

வ - று. மன்மேல் வருமென நோக்கான் மலர்மார்பின்
வென்வேன் முகந்தபுண் வெய்துயிர்ப்பத் - தன்வேலீ
பிடிக்கலு மாற்றாப் பெருந்தகை யேவத்
துடிக்கண் புலையன் றொடும்.

இ - ள். மாற்றரசன் தன்மேலே மீதூர்ந்துவருமென்று பாராளுகி அகன்ற மார்பிடத்து வென்றிவேல்பாய்ந்து முதுகுபுறத்துருவியபுண் வெய்தாகவுயிர்ப்பத் தன்னுடையவேலைக் கையாற்பிடிக்கவுமாட்டாத பெரியமேம்பாட்டினையுடையவன் சொல்லத் துடியின்கண்ணைப் புலையன் கொட்டாநிற்கும். எ - று. (உ)

## தழிஞ்சி:—

பரந்தெழுதரு படைத்தானை
வரம்பிகவாமைச் சுரங்காத்தன்று.

---

* வேஞ்சினமென்றும் படித்தற்கிடமுண்டு.

இ - ள். கைவளர்ந்தகடவாநின்ற ஆயுதத்தையுடையசேனை நகரமெல்லை யிற்புகுதாதபடி அருமையுடைத்தான வழியிடத்தைக் காத்தது. எ - று.

வ - று. குலாவுஞ் சிலையார் குறும்புகொள வெஃகி
யுலாவு முழப்பொழிக வேந்தன் —
கலாவு மினவேங்கை யன்ன விகல்வெய்யோர் காவல்
புனவேய் நரலும் புழை.

இ - ள். வளைவிடுவில்லினையுடையகாஞ்சியார்தம் அரணினைக் கைக்கொள்ள வேண்டி இயங்குமுயற்சியையொழிவானாக, எதிர்மன்னன்; தம்மிற்கலக்கும் இனத் தாலுயர்ந்த புலியையொத்த மாற்சரியத்தைவிரும்புவோர்காக்குமிடம், புனத்தின் மூங்கில் ஆர்க்கும்நூழை. எ - று.

இகல்வெய்யோரெனப் பிறர்போற்கூறினர். வஞ்சித்தழிஞ்சி இவ்வாறன்று.()

## படைவழக்கு:—

முத்தவிர் பூண் மற வேந்த
ஞொத்தவர்க்குப் படைவழங்கின்று.

இ - ள். முத்துவிளங்கும் ஆபரணத்தையுடையசினமன்னன் தம்மில் இனை மொத்தவர்க்கு ஆயுதத்தைக்கொடுத்தது. எ - று.

வ - று. ஐயங் களைந்திட் டடல்வெங்கூற் றுவப்ப
வையிலை யெஃக மவைபலவு - மொய்யிடை
யாட்கடி வெல்களிற் றண்ணல் கொடுத்தளித்தான்
வாட்குடி வன்க ணவர்க்கு.

இ - ள். ஐயப்பாட்டையொழித்துக் கொலைத்தொழிலையுடைய வெய்யகாலன் உணவுபெற்றேனென்று ஆர்த்துக்கொள்ள வியக்கத்தக்க இலைத்தொழிலாண்மிக்க வேல்பலவற்றையும் பூசலிடத்து ஆளைக்கடியும் போர்வெல்லும் யானையினையுடைய தலைவன் வழங்கித் தலையளிசெய்தான், மறக்குடியில் தறுகண்ணவர்க்கு. எ - று.

இதுவுமது.

கொடுத்தபின்னர்க் கழன்மறவ
ரெடுத்துரைப்பினு மத்துறையாகும்.

இ - ள். அரசன்படைவழங்கினபின்னர்க் கழல்வீரர் உயர்த்துச்சொல்லினும் முன்புசொன்ன துறையேயாம். எ - று.

வ - று. துன்னருந் துப்பிற் றொடுகழலார் சூழ்ந்திருப்பத்
தன்னம ரொள்வாளென் கைத்தந்தான் - மன்னற்கு
மண்ணகமோ வைகின்று மாலை நெடுங்குடைக்கீழ்
விண்ணகமும் வேண்டுங்கொல் வேந்து.

இ - ள். கிட்டுதற்கரியவலியினையும் கட்டியவீரக்கழலினையுமுடையார் தன் னைச்சுற்றியிருப்பத் தனக்குமேவும் ஒள்ளியவாளை என்கையிலேதந்தான்; அரசற்

கும்பூமியிடமோ தக்கவின்றது, முத்தமாலையணிந்த கொற்றக்குடைக்கீழ்ச் சுவர்க்கலோகத்தையும் விரும்புங்கொல் அரசன். எ - று.

இஃது *" ஒருபொருளிருசொற் பிரிவில வரையார்" என்பதனானும், †" ஏந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து, வேந்தனும் வேந்து கெடும்" என்பதனால், வேந்து இராச்சியமென்றுமாம். இனி, வேற்றுமன்னர்க்கு மண்ணகமோவெனவுருத லில்லை; அவனை விண்ணகத்தின்கண் ஏற்றலையும் அரசன் வேண்டுங்கொலென்று மாம். இப்பொருட்கு மன்னர்க்கென்பது பாடம். (௫)

### பெருங்காஞ்சி:—

தாங்கு திறன்மறவர் தத்த மாற்றல்
வீங்கு பெரும்படையின் வெளிப்படுத் தன்று.

இ - ள். எதிர்வரும் படையினைத்தடுக்கும் வலியினையுடைய கொடுவினையாளர் தத்தம்வலியை மிக்கபெருஞ்சேனையிடத்துத்தோற்றுவித்தது. எ - று.

வ - று. வில்லார் குறும்பிடை வேறுவே றார்த்தெழுந்த
கல்லா மறவர் கணைமாரி - யொல்லா
வெருவி மறவேந்தர் வெல்களி றெல்லா
மிருவி வரைபோன்ற வின்று.

இ - ள். விற்படைநிறைந்த அரணிடத்துப் பலவகையாக ஆரவாரித்துவந்த இயற்கையானமறத்தினையுடையாருடைய அம்புமழையைப் பொறாவாய் வெருண்டு, சினமன்னர்போரைவெல்லும் யானைபலவும், தினையரிந்ததாளினையுடைய மலையையொத்தன, இந்நாள். எ - று. (௬)

### வாள்செலவு:—

அருமுனையா னறைகூவினபின்
செருமுனைமேல் வாள்சென் றன்று.

இ - ள். வெல்லுதற்கரிய போரையுடைய வஞ்சியான் போர்க்கு அழைத்த பின்பு பொருபடையிடத்து வாள்போனது. எ - று.

வ - று. உணங்கு புலவறா வொன்னார் குரம்பை
நுணங்கரில் வெம்முனை நோக்கி - யணங்கிய
குந்தமலியும் புரவியான் கூடாதார்
வந்தபின் செல்கென்றான் வாள்.

இ - ள். உலரும் புலானாற்றம் ஒழியாத பகைவர் பாசறைக் [கைநிலை] செறிந்த பிணக்கத்தையுடைய கானத்திடத்து வெய்யபகையைப்பார்த்துப் பகைவரை வருத்திய வேலிட்டுப் புண்ணுறுதன்மிக்க குதிரையினையுடைய அரசன் சத்துருக்கள் போரவடர்ந்தபின்பு வாளினைச் செல்கவென்று ஏவினான். எ - று. (௭)

### குடைச்செலவு:—

முதுகுடி மறவர் முன்னுறச் சூழக்
கொதியழல் வேலோன் குடைச்சென் றன்று.

---

* தொல்காப்பியம், சொல்லதிகாரம், எச்சவியல், ௬௪.
† திருக்குறள், ௮௯௯.

இ - ள். பழங்குடிக்கொடுவினையாளர் முன்னே சூழ்ந்துபோக அழலும் நெருப்புப்போன்ற வேலினையுடையவன் குடையைப் புறவீடுவிடுத்தது. எ - று.

வ - று. தெம்முனை தேயத் திறல்விளங்கு தேர்த்தானை
வெம்முனை வெற்றி விறல்வெய்யோன் - றம்முனை
நாட்டிப் பொறிசெறித்து நண்ணார்மேற் செல்கென்று
கூட்டிநாட் கொண்டான் குடை.

இ - ள். பகைப்புலங்கெட, வெற்றிமிகுந்த தேராற்சிறந்தசேனையினையும் வெய்யபூசல்வெற்றியினையுமுடைய கொற்றத்தைவிரும்பியோன் இருபெருவேந்தர்தாம் பொரும்பூசலை இன்னநாளென்று நிச்சயித்துக் கட்டித் தன்இலாஞ்சனையிட்டுப் பகைவர்மேற்போகவெனச்சொல்லிச் சோதிடவருடனேகூட்டி நல்லநாளிலே குடையைப் புறவீடுவிட்டான். எ - று. (அ)

## வஞ்சினக்காஞ்சி :—

வெஞ்சின வேந்தன் வேற்றவர்ப் பணிப்ப
வஞ்சினங் கூறிய வகைமொழிந் தன்று.

இ - ள். வெய்யகோபத்தையுடைய மன்னவன் பகைவரைத் தாழப்பண்ணுவான்வேண்டி இவ்வாறுசெய்வேனெனச் சொல்லிய கூறுபாட்டைச்சொல்லியது. எ - று.

வ - று. இன்று பகலோ னிறவாமு னொன்னாரை
வென்று களங்கொள்ளா வேலுயர்ப்பி - னென்று
மரணவியப் பாயு மடையார்மு னிற்பேன்
முரணவிய முன்முன் மொழிந்து.

இ - ள். இற்றைநாள் ஆதித்தன் படுவதன்முன் பகைவரை வெற்றியைச்செய்து போர்க்களத்தைக்கொள்ளாதவேலை எடுப்பேனாயின் எந்நாளும் யானிருந்த அரணகெடத் தாக்கும் பகைவர்முன்னே நிற்பேனாவேன், மாறுபாடுகெட முன்னே முன்னே தாழ வார்த்தைகளைச்சொல்லி. எ - று. (கூ)

## பூக்கோணிலை :—

காரெதிரிய கடற்றானை
போரெதிரிய பூக்கொண்டன்று.

இ - ள். மேகம்பொருந்தியகடல்போல வலிக்குஞ்சேனை பூசலை எற்றுக்கொள்வான்வேண்டி அரசன்கொடுத்தபூவினைக்கொண்டது. எ - று.

வ - று. பருதிசெல் வானம் பரந்துருகி யன்ன
குருதியா றவதுகொல் குன்றூர் - கருதி
மறத்திறத்தின் மாறா மறவருங் கொண்டார்
புறத்திறுத்த வேந்திரியப் பூ.

இ - ள். ஆதித்தன்படும் அந்திவானம் உருகிப்பரந்தாலொத்த உதிரநதிஆவது போலும், மலைசூழ்ந்த ஊர்; நினைந்து சினக்கூற்றிற்றப்பாத கொடுவினையாளரும் கைக்கொண்டார், தங்களூர்ப்புறத்தேவிட்ட வஞ்சிமன்னன்கெடப் பூவினை. எ - று.
உம்மை - சிறப்பும்மை. (௧௦)

## தலைக்காஞ்சி:—

மைந்துயர மறங்கடந்தான்
பைந்தலைச் சிறப்புரைத்தன்று.

இ - ள். வலியோங்க மாற்றார்தம் மறத்தொழிலைக்கடந்தவன் பசுந்தலைமதிப்பைச் சொல்லியது. எ - று.

வ - று. விட்டிடிலென் வேந்தன் விலையிடிலெ னிவ்வுலகி
னிட்டுணாயி லெய்துவ வெய்திற்று - லொட்டாதார்
போர்தாங்கி யின்னும் புலவா ளுறைகழியாத்
தார்தாங்கி வீழ்ந்தான் றலை.

இ - ள். போக்கிடில் என்? அரசன், தலைக்குத் தக்கவிலைகொடுக்கில் என் இந்தப்பூமியிற் சிறப்பித்துச்சொல்லும் இசையினாற் பெறுவதெல்லாம் பெற்றதால் பகைவர்பூசலைத்தடுத்து ஒளியையுடைய புலாலாற்றத்தையுடையவாளை உறையைவிட்டெடுத்து விட்ட வஞ்சியான் தூசிப்படையைத்தடுத்துப் பட்டவனுடையதலையினை. எ - று. (௧௧)

## தலைமாராயம்:—

தலைகொடுவந்தா னுண்மலியச்
சிலையுடைவேந்தன் சிறப்பீந்தன்று.

இ - ள். தலையைக்கொடுவந்தான் மனமுவப்ப வில்வினையுடைய மன்னன் செல்வத்தைக்கொடுத்தது. எ - று.

வ - று. உவன்றலை யென்னு முறழ்வின்றி யொன்றா
ரிவன்றலையென் றேத்த வியலு - மவன்றலை
தந்தாற்கு நல்கல் வியப்போ கிளர்ந்தேத்தி
வந்தார்க்கு வந்தீயும் வாழ்வு.

இ - ள். உவன் இவனுக்குநேரென்றுசொல்லும் ஒப்பின்றிப் பகைவர் எல்லாரினும் இவன்தலையானவனென்றுசொல்லி வாழ்த்த நடக்கும் அவனுடையதலையைக் கொடுவந்தவற்குச் செல்வங்கொடுத்தல் அதிசயமோ! மிகப் புகழ்ந்துவந்தார்க்கு மகிழ்ந்துகொடுக்குஞ்செல்வம். எ - று. (௧௨)

## தலையொடுமுடிதல்:—

மண்டமருண் மாறுமைந்திற்
கொண்டான்றலையொடு கோல்வளை முடிந்தன்று.

இ - ள். உற்றபூசலின் ஒவாதவலியினையுடைய கைப்பிடித்தான் தலையுடனே திரண்டவளையினையுடையாள் இறந்தது. எ - று.

வ - று. கொலையானுக் கூற்றங் கொடிதே கொழுநன்
றலையானு டையலாள் கண்டே - முலையான்
முயங்கினாள் வாண்முகமுஞ் சேர்த்தினா ளாங்கே
யுயங்கினா ளோங்கிற் றுயிர்.

இ - ள். கொலைத்தொழிலையமையாதகூற்றம் சாலக்கொடிதாயிருந்தது; கண வனதுதலையை அலமயாளாய்த் தையலானவள்பார்த்தே கொங்கையாலேதழுவி னாள்; ஒளிசிறந்தவதனத்தையுங்கூட்டினாள்; அவ்விடத்தே வருந்தினாள்; மேலே பிரிந்தது உயிர். எ - று.

ஆதலாற் கூற்றம் கொடிதேயென்க. (௧௩)

## மறக்காஞ்சி:—

இலைப்பொலிதா ரிகல்வேந்தன்
மலைப்பொழிய *மறங்கடைஇயின்று.

இ - ள். பச்சிலையாலே பொலிவுபெற்ற மாலையாற்சிறந்த வலியினையுடைய மன்னன் பகைவர்மாறுபாடுநீங்க மறத்தொழிலைச் செலுத்தியது. எ - று.

வ - று. கருந்தலையும் வெண்ணிணமுஞ் செந்தடியு மீராப்
பருந்தோ டெருவை படர - வருந்திறல்
வேறாய மன்னர் வியப்பக் கடாயினான்
மாறா மறவன் மறம்.

இ - ள். கறுத்ததலையையும் வெள்ளைநிணத்தையும் சிவந்ததசையையும் இழுத் துக்கொண்டு பருந்தும் கழுகுஞ்செல்ல அரியவெற்றியினையுடைய பகைவர் அதி சயிப்பச் செலுத்தினான் நீங்காதகொடுவினையாளன், மறத்தொழிலை. எ - று. (௧௪)

## இ து வு ம து.

மண்கெழு மறவன் மாறுநிலை நோனான்
புண்கிழித்து முடியினு மத்துறை யாகும்.

இ - ள். †ஒப்பனையாற்பொலிந்த மறத்தொழிலையுடையவீரன் பகைவருடைய மாறுபாட்டுக்குப் பொறானாகிப் ‡பகைவர்வேல்பட்ட தன்மார்பிற்புண்ணைப் பிளந்து மரிப்பினும் முற்பட்டதுறையேயாம். எ - று.

வ - று. நகையம ராய நடுங்க நடுங்கான்
றொகையம ரோட்டிய துப்பிற் - பகைவர்மு
னுங்கிச் சினவுத னோனா னுதிவேலாற்
பொங்கிப் பரிந்திட்டான் புண்.

இ - ள். மகிழ்ச்சிமேவும் தன்கூட்டங்குலையக் குலையானாய்ச் செறிந்தபோ ரைத் துரந்த வலியினையுடைய மாற்றார் தன் முன்னெல்லையைக்கொண்டு கோபித் தலைப்பொறானாகி வேலின்நுதியாலே வெகுண்டு அறுத்திட்டான், புண்ணினை. று. (௧௫)

---

* மறங்கடாயின்றென்றும் பாடம்.

† பூமியிலேபொருந்தியவென்றும் பிரதிபேதமுண்டு.

‡ வேலினாலே புண்கிழித்துமுடியினும் அத்துறையேயாமென்றும் பிரதிபேத

## பேய்நிலை:—

செருவேலோன் திறநோக்கிப்
பிரிவின்றிப் பேயோம்பின்று.

இ - ள். போரைச்செய்யும் வேலினையுடையான்திறப்பாட்டை நோக்கி நீங்குதலொழிந்து பேய் பரிகரித்தது. எ - று.

வ - று. ஆயு மடுதிறலாற் கன்பிலா ரில்போலுந்
தோயுங் கதழ்குருதி தோள்புடைப்பப் - பேயுங்
களம்புகலச் சீறிக் கதிர்வேல்வாய் வீழ்ந்தா
னுளம்புகல வோம்ப லுறும்.

இ - ள். பலரும்கொண்டாடும் கொல்லும்வலியினையுடையாற்கு அன்பிலாதார் இல்லைப்போலும்; நிலமெல்லாம்நனையும் விரைந்தசோரி தோளிலே அலைப்பப் பேய்தானும் பூசற்களத்துள்ளார்விரும்ப வெகுண்டு ஒளியினையுடைய வேலின் வாயிலே விழுந்தவன்றன் மனமகிழப் பரிகரித்தலைச் செய்யாநின்றது. எ - று. (௧௬)

## பேய்க்காஞ்சி:—

பிணம்பிறங்கிய களத்துவீழ்ந்தார்க்
கணங்காற்ற வச்சுறீஇயன்று.

இ - ள். பிணமிக்க போர்க்களத்திலே பட்டார்க்குப் பேய் மிகவும் அச்சமுறுத்தியது. எ - று.

வ - று. கொட்கு நிமிருங் குறுகுங் குடர்சூடிப்
பெட்ப நகும்பெயரும் பேய்மக - ளுட்கப்
புனலங் குருதிப் புலால்வாய்க் கிடந்து
கனல விழிப்பவற் கண்டு.

இ - ள். சுழலும், நீளும், குறுகும், குடர்மாலையைச்சூடித் தன்னுள்ளம்விரும்பச் சிரிக்கும், போம், பேய்ப்பெண்; வெருவர, அழகிய உதிரமாகியநீரிற் புலாலிடத்துக் கிடந்து கோக்கு அழலநோக்கும் வீரனைப்பார்த்து. எ - று. (௧௭)

## தொட்டகாஞ்சி:—

வியன்மனைவிடலை புண்காப்பத்
துயன்முலைப்பேழ்வாய்ப் பேய்தொட்டன்று.

இ - ள். அகன்ற இல்லிலே தலைமகனுடையபுண்ணைப் பரிகரிக்க நான்ற முலையினையும் பெரியவாயினையுமுடைய பேய்மகள் புண்ணைத்தீண்டியது. எ - று.

வ - று. கொன்றுருத்த கூர்வே லவற்குறுகிக் கூரிருள்வாய்
நின்றுருத்து நோக்கி நெருப்புமிழாச் - சென்றுருத்தி
யொட்டார் படையிடந்த வாளுற்ப புணைந்தகலந்
தொட்டாள் பெருநத் துயில்.

இ - ள். கொலைத்தொழில்செய்து வெகுண்ட கூரியவேலினையுடையவனைக் கெட்டி மிக்க இருளின்கண்ணேநின்று கோபித்துப் பார்த்து அழலைக்கான்று அணுகப்போய் ஒரு பேய்மகள் பகைவர் ஆயுதம்பிளந்த தீராதபுண்ணைத்தாங்கின மார்பினைத் தீண்டினாள், உறக்கம் மிக. எ - று.

நீங்குதல் - உயிர்போதல். (௧௮)

## தொடாக்காஞ்சி:—

அடலஞ்சா நெடுந்தகைபுண்
டொடலஞ்சித் துடித்துநீங்கின்று.

இ - ள். கொலையஞ்சாத பெரிய நிலையினையுடையவன் புண்ணினைத் தீண்டுதற்குப் பயப்பட்டு நடுங்கிப் பேய் பெயர்ந்தது. எ - று.

வ - று. ஐயவி சிந்தி நறைபுகைத் தாய்மலர்தூய்க்
கொய்யாக் குறிஞ்சி பலபாடி - மொய்யிணர்ப்
பூப்பெய் தெரிய னெடுந்தகைபுண் யாங்காப்பப்
பேய்ப்பெண் பெயரும் வரும்.

இ - ள். வெண்சிறுகடுகினைத்தூவிக் குங்கிலியமுதலான நறுநாற்றத்தைப் புகைத்துத் தெரிந்தபூவினைச்சிதறிப் பறியாக்குறிஞ்சிப்பண் பலவும் பாடிச் செறிந்த கொத்தினையுடைய மலரிட்டுத் தொடுத்த மாலையாணிறைந்த பெரிய மேம்பாட்டினையுடையவன்புண்ணை யாங்கள்பரிகரிப்பப் பேய்மகள் நீங்கும் அணுகும். எ - று.

கொய்யாக்குறிஞ்சி - வெளிப்படை. (௧௯)

## மன்னைக்காஞ்சி:—

வியலிடமருள விண்படர்ந்தோ
னியல்பேத்தி யழிபிரங்கின்று.

இ - ள். அகன்ற பூமியினுள்ளார்மயங்க வீரசுவர்க்கத்தேசென்றவன்பண்பினைப் புகழ்ந்து நொந்துவருந்தியது. எ - று.

வ - று. போர்க்குப் புணைமன் புரையோர்க்குத் தாணுமன்
னூர்க்கு முலகிற்கு மோருயிர்மன் - யார்க்கு
மறந்திறந்த வாயி லடைத்ததா லண்ண
லிறந்திறந்த நீளிலை வேல்.

இ - ள் பூசலுக்குத்தெப்பமனையவன், உயர்ந்தோர்க்குத் தாணுவொப்பானவன், தன்பதிக்கும் பூமிக்கும் ஒருயிரையனையவன், யாவர்க்கும் தருமந்தோன்றினவாயிலை அடைத்தது; தலைவன்மருமத்தை வெளிசெய்த நீண்ட இலைத்தொழிலாற்சிறந்தவேல். எ - று. (௨0)

## கட்காஞ்சி:—

நறமலியு நறுந்தாரோன்
மறமைந்தர்க்கு மட்டீந்தன்று.

இ - ள். மதுமிகும் கமழுமாலையோன் தறுகணாளர்க்கு மதுவைக்கொடுத்தது எ - று.

வ - று. ஒன்று முனையோர்க் கொழிக வினித்துயின்
மன்னன் மறவர் மகிழ்தூங்கா - முன்னே
படலைக் குரம்பைப் பழங்கண் முதியாள்
விடலைக்கு வெங்கள் விடும்.

இ - ள். பொருதமன்னர்க்கு இனி ஒழிவதாக உறக்கம்; வேந்தன் கொடுவினையாளர் மதுவையுண்டு களித்தாடுவதற்குமுன்னே தழைக்கற்றையான்மேய்ந்த குடிலிடத்துப் புன்கட்கிழவி பெற்றவீரனுக்கு வெவ்விதானமதுவை *விடாநின்றாள். எ - று. (உக)

ஆஞ்சிக்காஞ்சி:—

காதற் கணவனொடு கனையெரி மூழ்கு
மாதர்மெல் லியலின் மலிபுரைத் தன்று.

இ - ள். அன்பினையுடைய தன் கொழுநனோடு செறிந்தநெருப்பிலே அழுந்தும் காதலையுடைய மெத்தென்றதன்மையாற்சிறந்தவள்தன் மிகுதியைச்சொல்லியது. எ - று.

வ - று. தாங்கிய கேளொடு தானு †மெரிபுகப்
பூங்குழை யாயம் புலர்கென்னு - நீங்கா
விலாழிப் பரித்தானை வெந்திறலார் சீறார்ப்
புலாழித் தலைக்கொண்ட புண்.

இ - ள். தரித்தகணவனோடு தானும் நெருப்பிலேபுகுவான்வேண்டிப் பொலிந்த மகரக்குழையையுடையவள் தோழிமாரை அகலப்போமினென்றுசொல்லும்; ஒழியாத வாய்நுரையினையுடைய குதிரையாற்சிறந்த சேனைப்பகைவர் சீறாரிடத்துப் புலானாற்றத்தினையுடைய சக்கரத்தாலே எறியப்பட்ட புண்ணை. எ - று.

புண்ணைத்தாங்கிய கேளொடு எனக்கூட்டுக. புலவென்பதனுள் அகரம் தொக்கது; ஒற்று இரட்டாமையுமறிக. (உஉ)

இதுவுமது.

மன்னுயிர் நீத்த வேலின் மனையோ
ளின்னுயிர் நீப்பினு மத்துறை யாகும்.

இ - ள். தலைவன் உயிரினைநீக்கின அயிலாலே மனைக்கிழத்தி இனிய ஆவியை ஒழிப்பினும் முன்சொன்னதுறையேயாம். எ - று.

வ - று. கௌவைநீர் வேலிக் கடிதேகாண் கற்புடைமை
வெவ்வேல்வாய் வீழ்ந்தான் விறல்வெய்யோ - னவ்வேலே

---

* விடாநின்றாளென்றும் பிரதிபேதமுண்டு.

† எரிபுகீஇயென்றும் பாடம்.

 

யம்பிற் பிறழுந் தடங்க ணவன்காதற்
கொம்பிற்கு மாயிற்றே கூற்று.

இ - ள். ஆரவாரத்தான்மிக்க கடல்சூழ்ந்தநிலத்திற் கொடிதேகாண், ஒரு மையுடைமை: வெய்தான அயில்வாயிலேபட்டான் வெற்றியைவிரும்பினோன்; ந்தஅயிலே, பகழிபோலமிளிரும் பெரியவிழியையுடையளான அவன் அன்பினை டைய வஞ்சிக்கொம்பனையாளுக்கும் கூற்றாயிற்று எ - று. (௨௩)

## மகட்பாற்காஞ்சி:—

ஏந்திழையாட் டருகென்னும்
வேந்தனோடு வேறுநின்றன்று.

இ - ள். அழகிய ஆபரணத்தினையுடையாளை எனக்குத்தருகவென்றுசொல் ம் அரசனோடு மாறுபட்டுநின்றது. எ - று.

வ - று. அளிய கழல்வேந்த ரம்மா வரிவை
யெளியளென் றெள்ளி யுரைப்பிற் - குளியாவோ
பண்போற் கிளவியிப் பல்வளையாள் வாண்முகத்த
கண்போற் பகழி கடிது.

இ - ள். அளியினையுடைய கழன்மன்னர் அழகியதிருவையனைய மடவாள் ரங்கொள்கைக்கு எளியளென்று இகழ்ந்துபேசின், தையாவோ? பண்ணையொத்த வார்த்தையினையுடைய இப்பல்தொடியினையுடையவள் ஒளியினையுடைய வதனத்த வாகிய கண்போன்ற அம்பு, கடிதாக. எ - று. (௨௪)

## முனைகடி முன்னிருப்பு:—

மன்னர்யாரையு மறங்காற்றி
முன்னிருந்த முனைகடிந்தன்று.

இ - ள். வேந்தரெல்லாரையும் சினத்தைக்காலப்பண்ணிப் பகைவர்முன்னே இருந்தவரைப் பூசற்களரியினின்றும் போக்கியது. எ - று.

வ - று. கடிகமழ் வேரிக் கடைதோறுஞ் செல்லக்
கொடிமலி கொல்களி றேவித் - துடிமகிழ
வார்த்திட் டமரு ளடையாரை யம்முனையிற்
பேர்த்திட்டான் பெய்கழலி னோன்.

இ - ள். மிகநாறும் மதுவினையுடைய மாற்றாரரணத்தின் வாயிலிடந்தோறும் போக வெற்றிக்கொடியான்மிக்க யானைகளையேவித் துடிகொட்ட ஆரவாரித்துப் போருட் பகைவரைச் செருப்புலத்தினின்றும் போகத்துரந்தான், இட்ட வீரக்கழ லினையுடையான். எ - று. (௨௫)

நான்காவது

காஞ்சிப்படலம் முற்றிற்று.

---

## ஐந்தாவது

# நொச்சிப்படலம்.

நுவலருங் காப்பி னொச்சி யேனை
மறனுடைப் பாசி யூர்ச்செரு வென்று
செருவிடை வீழ்ந்த திண்பரி மறனே
யெயிலது போரே யெயிறனை யழித்த
லழிபடை தாங்கன் மகண்மறுத் துமொழித லென
வெச்ச மின்றி யெண்ணிய வொன்பது
நொச்சித் திணையுந் துறையு மாகும்.

எ - ன், நொச்சித்திணையுந் துறையுமாமாறுணர்த்துதல்நுதலிற்று.

இ - ள். நொச்சி, மறனுடைப்பாசி, ஊர்ச்செரு, செருவிடைவீழ்தல், குதிரை மறன், எயிற்போர், எயிறனையழித்தல், அழிபடைதாங்கல், மகண்மறுத்துமொழிதல் எனச்சொல்லப்பட்ட இவ்வொன்பதும் நொச்சித்திணையும் துறையுமாம். எ - று.

## நொச்சி:—

எப்புழை ஞாயி லேந்துநிலை யரணங்
காப்போர் சூடிய பூப்புகழ்ந் தன்று.

இ - ள். ஏவறையையுடைய முடக்குக்களைத்தாங்கின நிலைமையினையுடைய எயில்காக்கும்வீரர் மலைந்தபூவைப்புகழ்ந்தது. எ - று.

வ - று. ஆடரவம் பூண்டா னழலுணச் சீறிய
கூடரணங் காப்போர் குழாம்புனையச் - சூடினா
ருச்சி * மதிவழங்கு மோங்கு மதில்காப்பா
னொச்சி நுதிவே லவர்.

இ - ள். ஆடும்பாம்பையணிந்தான் நெருப்புநுகரக் கோபித்த திரிபுரத்தைக் காக்கும் அவுணர்திரளையொப்ப மலைந்தார்; மேலேதிங்களூரும் உயர்ந்தபுரிசையைக் காவல்செய்வான்வேண்டி நொச்சிப்பூவை நுனியாற்சிறந்த வேலினையுடையவர். எ - று.

வேலவர்நொச்சிசூடினரென்க. (௧)

## மறனுடைப்பாசி:—

மறப்படை மறவேந்தர்
துறக்கத்துச் செலவுரைத்தன்று.

இ - ள். சினச்சேனையினையுடைய சினமன்னர் வீரசுவர்க்கத்திடத்துப் போன போக்கைச்சொல்லியது. எ - று.

---

* மதிதவழுமெனவும் பாடம்.

20763



வ - று. பாயினா் மாயும் வகையாற் பலகாப்பு
மேயினு ரேய விகன்மறவ - ராயினு
ரொன்றி யவரற வூர்ப்புறத்துத் தார்தாங்கி
வென்றி யமரர் விருந்து.

இ - ள். அரணைச் சூழப்பார்த்தார், பலமுறையாற் பலகாவலையும் ஏவினார்; வினை மாறுபாட்டையுடையவீரர், ஆயினார்; எதிர்தாக்கக் கிட்டினவர்கெட ஊரி ிடத்துத் தூசிப்படையைத்தடுத்து வெற்றியினையுடையதேவர்கட்கு விருந்து. - று.

விருந்தாயினாரென்க. (உ)

ஊர்ச்செரு:—

அருமிளையோடு கிடங்கழியாமைச்
செருமலைந்த சிறப்புரைத்தன்று.

இ - ள். பகைவராற்புகுதற்கரிய காவற்காட்டோடு அகழ்சிதையாதபடி பூசற் செய்த மதிப்பினைச் சொல்லியது. எ - று.

வ - று. வளையும் வயிரு மொலிப்பவாள் வீசி
மிளையுங் கிடங்குஞ் சிதையத் - தளைபரிந்த
நோனா் படையிரிய நொச்சி விறன்மறவ
ராஞா ரமர்விலக்கி யார்ப்பு.

இ - ள். சங்கும் கொம்புமுழங்க வாளையோச்சிக் காவற்காடும் அகழுமழியக் காவற்பிணியையறுத்த பகைவரான உழிஞையார்சேனைகெட நொச்சியிடத்து வெற்றிவீரர், ஆனார்; போரைவிலக்கி ஆரவாரிப்பு. எ - று.

ஆரவாரிப்பாரென்க. (௩)

செருவிடைவீழ்தல்:—

ஆழ்ந்துபடு கிடங்கோ டருமிளை காத்து
வீழ்ந்த வேலோர் விறன்மிகுத் தன்று.

இ - ள். ஆழமுடைத்தான கிடங்கினோடு அரிய காவற்காட்டைக்காத்துப் பட்ட வேல்வீரர்வெற்றியைச் சொல்லியது. எ - று.

வ - று. ஈண்டரில் சூழ்ந்த விளையு மெரிமலர்க்
காண்டகு நீள்கிடங்குங் காப்பாராய் - வேண்டார்
மடங்க லனைய மறவேலோர் தத்த
முடம்பொடு காவ லுயிர்.

இ - ள். திரண்டபிணக்குச்சுற்றின காவற்காடும் நெருப்புப்போன்ற பூவினையுடைய காணத்தக்க நீண்ட அகழும் காவல்புரிவாராய், வேண்டுகிலர்; சிங்கமொத்த சினவேலோர் தத்தமுடைய மெய்யுடன் உயிரைக்காத்தலை. எ - று.

காத்தலைவேண்டாரென்க. (௪)

## குதிரைமறம்:—

ஏமாண்ட நெடும்புரிசை
வாமானது வகையுரைத்தன்று.

**இ-ள். எய்யுந்தொழில்மாட்சிமைப்பட்ட பெரியமதிலிடத்துப் பாயுங்குதிரையது பகுதியைச்சொல்லியது. எ-று.**

வ-று. *தாங்கன்மின் றாங்கன்மின் றானை விறன்மறவி
ரோங்கன் மதிலு ளொருதனிமா - ஞாங்கர்
மயிரணியப் பொங்கி மழைபோன்று மாற்ற
ருயிருணிய வோடி வரும்,*

**இ-ள். தடுத்தற்கரிது! தடுத்தற்கரிது!! தடாதேகொண்மின்! தடாதேகொண்மின்!! சேனையிடத்து வென்றிவீரர்காள், மலைபோன்றபுரிசையிடத்து ஒப்பில்லாததொருகுதிரை பக்கத்தே கவரியிட எழுந்து மேகத்தையொத்துப் பகைவருயிரை உண்பான்வேண்டிக் கடுகிவரும். எ-று.** (௫)

## எயிற்போர்:—

அயிற்படையி னரண்காக்கு
மெயிற்படைஞ ரிகன்மிகுத்தன்று.

**இ-ள். கூரிய ஆயுதத்தாலே குறும்பினைக்காக்கும் மதிலிடத்துப் போர்வீரர் மாறுபாட்டைச் சிறப்பித்தது. எ-று.**

வ-று. *மிகத்தாய செங்குருதி மேவரு மார்பி
னுகத்தா முயங்கியக் கண்ணு - மகத்தார்
புறத்திடைப் போதந் தடல்புரிந்தார் பொங்கி
மறத்திடை மானமேற் கொண்டு.*

**இ-ள். பெருகப்பரந்த சிவந்த சோரி பொருந்தினஅகலத்தினின்றும் வீழத்தாம் வருந்தியவிடத்தும், உள்ளுள்ளார் அரணிற்குப்புறம்பேபோந்து கோறலை விரும்பினர், கோபித்துச் சினத்தின்கண்ணே அபிமானத்தை மேற்கொண்டு. எ-று.** (௬)

## எயிறனையழித்தல்:—

துணிவுடைய தொடுகழலா
னணிபுரிசை யழிவுரைத்தன்று.

**இ-ள். தெளிவுடைத்தான கட்டுங்கழலோன் அழகியமதிலின்கட் சேட்டினைச் சொல்லியது. எ-று.**

வ-று. *அகத்தன வார்கழ லேனென்ற லரணின்
புறத்தன போரெழிற் றிண்டோ - ளுறத்தழீஇத்
தோட்குரிமை பெற்ற துணைவளையார் பாராட்ட
வாட்குரிசில் வானுலகி னான்.*

இ - ள். அரணினுள்ளேவீழ்ந்தன, கட்டுங்கழலாற்பொலிந்த வலியகால்; மதிற்புறம்பேவீழ்ந்தன, பூசலைச்செய்யும் அழகிய திண்ணியதோள்; இறுகவளைத்துத் ாட்கு உரியரான் இணைவளையினையுடைய தெய்வமகளிர் கொண்டாட வாளினை டைய உபகாரி விண்ணிடத்தான். எ - று. (எ)

## அழிபடைதாங்கல் :—

இழிபுடன் றிகல்பெருக
வழிபடை யாண்காத்தன்று.

இ - ள். தம்படைத்தாழ்விற்குக்கோபித்து மாறுபாடுமிகக் கெட்டசேனை யயிக் காத்தது. எ - று.

வ - று. பரிசை பலகடந்து பற்று ரெதிர்ந்தா
ரெரிசெ யிகலரணங் கொண்மார் - புரிசை
யகத்தடி யுய்யாமை யஞ்சுடர்வா ளோச்சி
மிகத்தடிந்தார் மேனின் றவர்.

இ - ள். கிடுகுபடைபலவற்றையும்வென்று பகையான உழிஞையார் எதிர்ந் ாராக, அழலினைப்பண்ணும் 'மாறுபாட்டுக்குறும்பினைக் கொள்வான்; மதிலினுட் ாலிடாதபடி அழகிய ஒளியையுடைய வாளைஒச்சிப் பிணம்பெருகத் துணித்தார்; தின்மேல் நின்றவீரர். எ - று. (அ)

## மகண்மறுத்துமொழிதல் :—

வெம்முரணோன் மகள்வேண்ட
வம்பதிலோர் மறுத்துரைத்தன்று.

இ - ள். வெய்தான பகையையுடையவன் மகளைவேண்ட அழகிய குறும்பினுள்ளோர் மறுத்துச்சொல்லியது. எ - று.

வ - று. ஒள்வாண் மறவ ருருத்தெழூந் தும்பர்நாட்
கள்வார் நறுங்கோதை காரணமாக் - கொள்வான்
மருங்கெண்ணி வந்தார் மழகளிற்றின் கோடிக்
கருங்கண்ணி வெண்கட்டிற் கால்.

இ - ள். நொச்சியில் ஒள்ளியவாள்வீரர் கோபித்தெழுந்து,மேனுள் தேனொழுகும் நறுமாலையினையுடையவள்பொருட்டாகக் கொண்டு கோள்வான்வேண்டி இடையின் அழகைக்கருதி வந்தவருடைய இளைய வாரணத்தின்கொம்பு, இந்தக் கறுத்த கண்ணினையுடையாள் வெளுத்த கட்டிலின்கால். எ - று.

“ஆயிரு திணையு மரசர்க் குரிய” என்பதனால் மகட்பாற்காஞ்சி அரசர்க் குரித்து. இது மறவர்க்குரித்து. (கூ)

ஐந்தாவது

நொச்சிப்படலமுற்றிற்று.

---

## ஆறாவது

# உழிஞைப்படலம்.

உழிஞை யோங்கிய குடைநாட் கோளே
வாணாட் கோளே முரச வுழிஞை
கொற்ற வுழிஞையோ டரச வுழிஞை
கந்தழி யென்று முற்றுழி ஞையே
காந்தள் புறத்திறை யாரெயி லுழிஞை
யருந்தோ லுழிஞை குற்றுழி ஞையொடு
கோட்புறத் துழிஞை பாசி நிலையே
யேணி நிலையே யிலங்கெயிற் பாசி
முதுவுழி ஞையே முந்தகத் துழிஞை
முற்று முதிர்வே யானைக் கோளே
வேற்றுப்படை வரவே யுழுதுவித் திடுதல்
வாண்மண்ணு நிலையே மண்ணுமங் கலமே
மகட்பா லிகலே திறைகொண்டு பெயர்த
லடிப்பட விருத்த றொகைநிலை யுளப்பட
விழுமென் சீர்த்தி யிருபத் தொன்பது
முழிஞை யென்மனா ருணர்ந்திசி னோரே.

**எ - ன், உழிஞைத்திணையும் துறையுமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.**

**இ - ள். உழிஞை, குடைநாட்கோள், வாணாட்கோள், முரசவுழிஞை, கொற்றவுழிஞை, அரசவுழிஞை, கந்தழி, முற்றுழிஞை, காந்தள், புறத்திறை, ஆரெயிலுழிஞை, தோலுழிஞை, குற்றுழிஞை, புறத்துழிஞை, பாசிநிலை, ஏணிநிலை, எயிற்பாசி, முதுவுழிஞை, அகத்துழிஞை, முற்றுமுதிர்வு, யானைக்கோள், வேற்றுப்படைவரவு, உழுதுவித்திடுதல், வாண்மண்ணுநிலை, மண்ணுமங்கலம், மகட்பாலிகல், திறைகொண்டுபெயர்தல், அடிப்படவிருத்தல், தொகைநிலை எனச்சொல்லப்பட்ட இவ்விருபத்தொன்பதும் உழிஞைத்திணையும் துறையுமாம். எ - று**

### உழிஞை:—

முடிமிசை யுழிஞை சூடி யொன்னார்
கொடிநுடங் காரெயில் கொளக்கரு தின்று.

**இ - ள். தம்முடிமேலே உழிஞைமாலையையணிந்து பகைவர்கொடியாடுமதிலைக் கைப்பற்றநினைந்தது. எ - று.**

வ - ௫. உழிஞை முடிபுனைந் தொன்றுப போர் மன்னர்
விழுமதில் வெல்களிறு பாயக் - கழிமகிழ்
வெய்தாரு மெய்தி யிசைநுவலுஞ் சீர்த்தியனே
கொய்தார மார்பினெங் கோ.

இ - ள். உழிஞைமாலையை முடிமேலேசூடிப் பொருந்தாத வேந்தரைச் சய்யும் வேந்தர்தம் சீரியபுரிசையை வெல்லும்யானைகுத்த மிக்க களிப்புமேவாத பரியோரும் மகிழ்ச்சியைமேவிக் கீர்த்திகூறும் பெரும்புகழினையுடையான், மட் ஞ்செய்த மாலையாற்சிறந்த மார்பினையுடைய எம்வேந்து. எ - று.

அம்மென்றது - சாரியை. (௧)

## குடைநாட்கோள் :—

செற்றடையார் மதில்கருதிக்
கொற்றவேந்தன் குடைநாட்கொண்டன்று.

இ - ள். செறுத்துக் கூடாதாருடையஅரணைக் கொள்ளநினைந்து வெற்றி ன்னவன் குடையைப் புறவீடுவிட்டது. எ - று.

வ - று. நெய்யணிக செவ்வே னெடுந்தேர் நிலைபுகுக
கொய்யுளைமா கொல்களிறு பண்விடுக - வையகத்து
முற்றக் கடியாணை மெல்லா முரணவிந்த
கொற்றக் குடைநாட் கொள.

இ - ள். நெய்யிட்டு அலங்கரிப்பனவாக, பகைவர் குருதியாடிச் சிவந்தவேல் ;ள்; நெடியதேர்களும் நிற்குங்கூடங்களிலே நிற்பனவாக; கொய்த தலையாட்டத் ினையுடைய குதிரையும் கொல்லும் யானையும் போர்க்குச்செய்த பண்ணினைக் ீவிக; ஞாலத்து அடையக் காவற்குறும்புகளெல்லாம் தத்தம் மாறுபாடுகெட்டன, வெற்றிக்குடையைப் புறவீடுவிட. எ - று. (௨)

## வாணாட்கோள் :—

கலந்தடையார் மதில்கருதி
வலந்தருவா ணாட்கொண்டன்று.

இ - ள். கூடிச்சேராதார்தம் அரணினைக் கோடலை நினைந்து வெற்றிகொள் ளும் வாளைப் புறவீடு விட்டது. எ - று.

வ - று. வாணாட் கொளலும் வழிமொழிந்து வந்தடையாப்
பேணார் பிறைதொடும் பேமதிற் - பூணா
ரணிகொள் வனமுலையா ராடரங்க மேறிப்
பிணிகொள்பே யாடும் பெயர்த்து.

இ - ள். வாளினைப் புறவீடுவிட்டதாக, தாழ்வுசொல்லி வந்து சேராதபகை வருடைய மதிலைத்தீண்டும் அச்சமுறுத்துமதிலிடத்து ஆபரண நிறைந்த அலங் காரங்கொண்ட அழகிய கொங்கையினையுடையார் நிருத்தமண்டபத்தேயேறிக் கை கோத்துப் பேயாடும், பலகூத்தினையும் மாறி. எ - று.

திணைதோறும் வாணாட்கோள் குடைநாட்கோள் வேறுபாடுடைய. (௩)

## முரசவுழிஞை :—

பொன்புனை யுழிஞை சூடி மறியருந்துந்
திண்பிணி முரச நிலையுரைத் தன்று.

இ - ள். பொன்னாலேசெய்த உழிஞை மாலையைமலைந்து ஆடுவெட்டியிடும் பலியை நுகரும் திண்ணிதாக வாராற்கட்டின முரசின் நிலைமையைச் சொல்லியது. எ - று.

வ - று. கதிரோடை வெல்களிறு பாயக் கலங்கி
யுதிரா மதிலு முளகொ - லதிருமாற்
பூக்கண் மலிதார்ப் புகழ்வெய்யோன் கோயிலுண்
மாக்கண் முரச மழை.

இ - ள். ஒளியாற்சிறந்த பட்டத்தினையுடைய வெல்லும்யானை குத்தக் குலைந்து வீழாத புரிசையும் சிலவுளபோலும்; முழங்குமால், மலர்கண்மிக்க மாலையினையுடைய இசையைவிரும்பியோன் மாளிகையிடத்துப் பெரிய கண்ணினையுடைய வீரமுரசம் மழைபோல். எ - று.

மழைபோல் அதிருமென்க. (௪)

## கொற்றவுழிஞை :—

அடையாதா ரரண்கொள்ளிய
படையோடு பரந்தெழுந்தன்று.

இ - ள். பகைவர்தம் காவற்பதியைக் கைக்கொள்வான் வேண்டிச் சேனையோடு கைவளர்ந்து சென்றது. எ - று.

வ - று. வெள்வாட் கருங்கழற்கால் வெஞ்சுடர்வேற் றண்ணளியான்
கொள்வான் கொடித்தானை கொண்டெழுந்தா - னொள்ளாதா
ரஞ்சுவரு வாயி லருமிளைக் குண்டகழி
மஞ்சிவரு ஞாயின் மதில்.

இ - ள். ஒளிபரந்த வாளினையும் வலிய வீரக்கழலாற்சிறந்த காலினையும் வெய்ய சோதியாற்பொலிந்த வேலினையும் தண்ணளியையுமுடையவன் கைப்பற்றிக் கொள்வானாகப் பதாகையினையுடையசேனையை ஒன்றுபடக் கொண்டெழுந்தான்; பொருந்தாதார் வெருவரு வாயிலினையும் புகுதற்கரிய குறுங்காட்டினையும் ஆழ்ந்த கிடங்கினையும் மேகம்பரக்கும் ஏவறையினையு முடைய அரணத்தை. எ - று. (௫)

## அரசவுழிஞை :

தொழில்காவன் மலிந்தியலும்
பொழில்காவலன் புகழ்விளம்பின்று.

இ - ள். காவற்செய்தி மிக்குநடக்கும் பூமிகாவலன்றன் சீர்த்தியைச்சொல்லியது. எ - று.

வ - று. ஊக்க முரண்மிகுதி யொன்றிய நற்சூழ்ச்சி
யாக்க மவன்க ணகலாவால் - வீக்க
நகப்படா வென்றி நலமிகு தாரா
னகப்படா தில்லை யரண்.

இ - ள். மனவெழுச்சியும் மாறுபாட்டின் பெருமையும் பொருந்திய கல்ல ாரமும் செல்வப்பெருக்கமும் அவனிடத்து நீங்காவால்; பெருமையினையும் ரால் இகழத்தகாத வெற்றியினையும் கன்மைமலியு மாலையினையும் உடையவ க்குக் கையகப்படாதன இல்லை, காவற்குறும்புகள் யாவையும். எ - று. (சா)

கந்தழி:—

மாவுடைத்தார் மணிவண்ணன்
சோவுடைத்த மறநுவலின்று.

இ - ள். வண்டினையுடைய மாலையாற்சிறந்த நீலமணிபோன்ற மேனியை டையான் * வீரசோவென்னும் அரணத்தை அழித்த வீரத்தைச் சொல்லியது. - று.

வ - று. அன்றெறிந் தானு மிவனு லரண்வலித்
தின்றிவன் மாறு மெதிர்வார்யா - சென்று
மடையார் மணிப்பூ ணடையாதார் மார்பிற்
சுடராழி நின்றெறியச் சோ.

இ - ள். அந்நாள் அழித்தவனுமிவன்; அரண்வலிதென்றுதேறி இந்நாள் இவன் கையாக எதிர்ப்பாரியார்! எக்காலத்தும்; மூட்டார்ந்த மணியணியையுடைய பாருந்தாதாருடைய அகலத்து ஒளிவிடுந்திகிரி நின்று அழலச் சோவென்னும் அர ரத்தை. எ - று.

இஃது உவமையன்று; மிகுதிகூறியது. (எ)

முற்றுழிஞை:—

ஆடிய லவிர்சடையான்
சூடியபூச் சிறப்புரைத்தன்று.

இ - ள். அசையுந்தன்மையினை உடைத்தாய் விளங்கும் வேணியையுடை ான் மலைந்த பூவினது நன்மையைச் சொல்லியது. எ - று.

வ - று. மயங்காத தார்ப்பெருமை மற்றறிவார் யாரே
யியங்காண மூன்று மெரித்தான் - றயங்கிணர்ப்
பூக்கொ ளிதழிப் புரிசெஞ் சடையானு
மாக்கொ ளுழிஞை மலைந்து.

இ - ள். மருளாத உழிஞையின் மிகுதியை வேறுணர்வார் யாவர்தாம்! உதிரி ரங்கண்மூன்றையும் சுட்டான்; விளங்கும் கொத்திற் பொலிவுகொண்ட கொன் றையையுடைய புரிந்த செஞ்சடையானும் பெருமைகொண்ட உழிஞையைச்சூடி. எ - று. (அ)

காந்தள்:—

கருங்கடலுண் மாத்தடிந்தான்
செழுங்காந்தட் சிறப்புரைத்தன்று.

---

* ஈண்டுக்கூறிய அரணத்தைத் திருமால் அழித்தனரென்பதை, சிலப்பதி காரம், ஆய்ச்சியர்குரவையில் "மூவுலகும்" என்னும் செய்யுளிற் காண்க.

இ - ள். கறுத்த கடலிடத்துச் சூரபன்மாவைக் கொன்றவனுடைய காந்தட் பூவின் மிகுதியைச் சொல்லியது. எ - று.

வ - று. குருகு பெயரிய குன்றெறிந் தானு
மூருகெழு காந்தண் மலேந்தான் - பொருகழற்
கார்கருதி வார்முரச மார்க்குங் கடற்றுனைப்
போர்கருதி யார்மலேயார் பூ.

இ - ள். குருகின் பெயர்பெற்ற மலையை எறிந்தவனும் அழகுமருவின *கோடலேச்சூடினுன்; வீரக்கழலிணையுடைத்தாய் மேகத்தையொத்து வாராற்பிணித்த முரசுமுழங்குங் கடல்போன்ற சேனையிடத்துப் பூசலேநினைந்து யாவர் சூடார்! பூவினை. எ - று.

குருகு பெயரியகுன்று - கிரவுஞ்சகிரி. (௯)

புறத்திறை :—

மறத்துறை மலிந்து மண்டி மாற்றார்
விறற்கொடி மதிலின் புறத்திறுத் தன்று.

இ - ள். சினத்தின்வழிமிக்கு மேற்கொண்டு பகைவருடைய வெற்றிக்கொடி யணிந்த அரணின் சுற்றிலேவிட்டது. எ - று.

வ - று. புல்லார் புகலொடு போக்கொழியப் பொங்கினனுய்ப்
பல்லார் மருளப் படைபரப்பி - யொல்லார்
நிறத்திறுத்த வாட்டானை நோரார் மதிலின்

இ - ள். பகைவர் புகுமிடமும் ஓடிப்போம் வழியும் இன்றியே யொழியப் பொங்கியெழுந்து பலமன்னரும் மயங்கத் தன்சேனையைக் கைவளரவிட்டுப் பகைவர்மருமத்திலே குளித்த வாட்சேனையினையுடைய பகைவராரணத்தின் பக்கத்திலே பாடிவீடுகொண்டான்; பொலிந்த வீரக்கழலிணையுடையவன். எ - று. (௧௦)

ஆரெயிலுழிஞை :—

வாண்மறவர் வணங்காதார்
நீண்மதிலி னிலேயுரைத்தன்று.

இ - ள். வாளினையுடையவீரர் தம்மைப்பணியாதாருடைய உயர்ந்த புரிசையின் திண்மையைச் சொல்லியது. எ - று.

வ - று. மயிற்கணத் தன்னுர் மகிழ்தேற லூட்டக்
கயிற்கழலார் கண்கனல் பூப்ப - வெயிற்கண்ணுர்
வியப்போர் செய்தாலும் வென்றி யரிதரோ
மாயப்போர் மன்னன் மதில்.

* கோடல்-காந்தள்; இதுமுருகக் கடவுளுக்குரிய அடையாளப்பூ. இதனை "சுரும்புமூசாச் சுடர்ப்பூங்காந்தட், பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்" என்னும் திருமுருகாற்றுப் படையாலுணர்க.

இ - ள். மயிலின்றிரளனையார் களிக்கும் மதுத்தெளிவை உண்ணப்பண்ண ட்வோயாற்சிறந்த கழலினையுடைய உழிஞையார்விழி நெருப்பைக்கால அரணி ந்தார் பலரும்படப் பூசல்செய்தாலும் வெற்றியரிது ; வஞ்சச்செருவினைச் செம்ம ல்ல வேந்தன் புரிசையை. எ - று.

மதிலை வென்றியரிதென்க. அரோ - அசை. (கக)

## தோலுழிஞை :—

வென்றி யோடு புகழ்விளைக் கும்மெனத்
தொன்று வந்த தோன்மிகுத் தன்று.

இ - ள். வெற்றியுடன் இசையையுண்டாக்குமெனச்சொல்லிப் பழையதாகி ந்த கிடுகுபடையைச் சிறப்பித்தது. எ - று.

வ - று. நின்ற புகழொழிய நில்லா வுயிரோம்பி
யின்றுநாம் வைக விழிவாகும் - வென்றொளிரும்
பாண்டி னிரைதோற் பணியார் பகையரணம்
வேண்டி லெளிதென்றான் வேந்து.

இ - ள். நிலைநின்ற கீர்த்திபோக நிலைநில்லாத உயிரைக்காத்து இற்றைநாளி ல நாம் இவ்வெயிற்புறத்துத் தங்குமது நமக்குத் தாழ்வு ; வென்றுவிளங்கும் கண் நூடி நிரைத்த கிடுகுபடை வணங்காதார்முனைக்குறும்பினைக் கொள்ளவேண்டிற் கொள்கை எளிதென்று சொன்னான் மன்னன். எ - று.

ஆதலால் இன்றுநாம்வைகல் இழிவாகுமென்க. தோலென்பது ஆகுபெயர்.

## குற்றுழிஞை :—

*கருதாதார் மதிற்குமரிமே
லொருதானாகி யிகன்மிகுத்தன்று.

இ - ள். பகைவராணாகிய அழிவில்லாததன்மேல் தான் ஒருவனுமேயாகி மாறுபாட்டினைப் பெருக்கியது. எ - று.

வ - று. குளிறு முரசினான் கொண்டா னரணங்
களிறுங் கதவிறப் பாய்ந்த - வொளிறு
பயிற்றும் படைந்த வணியெழு வெல்லா
மெயிற்றுப் படையா லிடந்து.

இ - ள். அதிரும் வீரமுரசினையுடையான் வென்று கைப்பற்றினான் குறும் பினை ; போர்யானைகளும் வாய்தலிற்கதவுஒடியப் பாய்ந்தன ; விளங்கும் வேல் வலிசிறந்த நிரைத்த கணையமுழுதும் மருப்பாயுதத்தாலே பெயர்த்து. எ - று. (கங)

இதுவுமது.

வளைஞால வயிரார்ப்ப
மிளைகடத்தலு மத்துறையாகும்

---

* "வணங்காதார் மதிற்குமரி" என்பர் பின்னும்.

இ - ள். சங்கமுழங்கக் கொம்புகுறிப்பக் காவற்காட்டைக் கடந்து புகுமது முன்னஞ்சொன்ன துறையேயாம். எ - று.

வ - று. அந்தரந் தோயு மமையோங் கருமிளை
மைந்தர் மறிய மறங்கடந்து - பைந்தார்
வினைமார்பின் வின்னரல வெங்கணை தூவார்
வளைமார்பின் வைகின வாள்.

இ - ள். ஆகாயத்தைக் கிட்டும் மூங்கிலுயர்ந்த அரிய காவற்காட்டிற் பொரும் ரர் முதுகிட மறத்தைவென்று செவ்விய மாலைமணத்தையுடைய அகலத்திலே ன்ஞெலிப்ப வெவ்விய அம்பைச்சிந்துவாருடைய மலைபோன்ற அகலங்களி ல தங்கின; உழிஞையாருடைய வாள்கள். எ - று.

தூவுவாரென்பது - தூவாரென இடைக்குறைந்தது (கச)

இதுவுமது

பாடருந்தோற் படைமறவ
ராடலொடடையினு மத்துறையாகும்.

இ - ள். சொல்லுதற்கரிய பரிசையினையுடைய சேனைத்தலைவர் ஆடுதலுட 'ன நொச்சியாருடைய அரணினைக்குறுகினும் முன்புசொன்ன துறையேயாம். று.

வ - று. நிரைபொறி வாயி னெடுமதிற் சூழி
வரைபுகு புள்ளின மான - விரைபடைந்தார்
வேலேந்து தானை விறலோன் விறன்மறவர்
தோலேந்தி யாட றொடர்ந்து.

இ - ள். ஒழுங்குபட்ட இயந்திரங்களாலமைந்த *புதலாவினையுடைய உயர் த புரிசைநெற்றியிலே மலையிடத்துச்சென்றுபுகும் புட்களையொப்பக் கடுங்க கிட் டினர், வேலினையுயர்த்த சேனையானிறைந்த வெற்றியினையுடையோன வென்றி வீரர்; கிடுகினையெடுத்துத் தாமாடுதலைச் சூழ்ந்து. எ - று.

தொடர்ந்து விரைபடைந்தா ரென்க. (கரு)

புறத்துழிஞை:—

விண்டோயு மிளை கடந்து
குண்டகழிப் புறத்திறுத்தன்று.

இ - ள். ஆகாயத்தைக்கிட்டும் காவற்காட்டைக்கடந்து ஆழ்ந்தகிடங்கின்கரை யிலே விட்டது. எ - று.

வ - று. கோள்வாய் முதலைய குண்டகழி நீராக
வாள்வாய் மறவேந்தன் வந்திறுத்தா - னீள்வாயி
லோங்க லரணத் தொளிவலையார் வெய்துயிர்ப்ப
வாங்கொ லரிய வமர்.

* புகலினையுடைய வென்றும் பிரதிபேதமுண்டு.

இ - ள். ஆளைப்பற்றுகைதப்பாத முதலையினையுடைய சூழ்ந்த அகழிழ தண்ணீராக வாய்த்தவாளினையுடைய மறமன்னன் வந்துவிட்டான்; நீண்டு வாய்தலாற்றந்த உயர்ச்சியினையுடைய மதிலிடத்து ஒள்ளியவளையினையுடையார் வெய்தாக யிர்ப்ப வெல்லுதற்கரியபூசல் ஆம்போலும். எ - று. (௧௬)

பாசிநிலை :—

அடங்காதார் மிடல்சாயக்
*கிடங்கிடைப் போர்மலைந்தன்று.

இ - ள். பகைவருடைய வலிகெட அகழியிடத்துப் பூசலைமேற்கொண்டது. - று.

வ - று. நாவாயுந் தோணியு மேல்கொண்டு நள்ளாதா
ரோவா ரிலங்கி யுடலவும் - பூவா
ரகழி பரந்தொழுகு மங்குருதிச் சேற்றுப்
பகழிவாய் வீழ்ந்தார் பலர்.

இ - ள். ஓடமும் ஒருமரத்தோணியும் மேல்கொண்டு பொருந்தாதார் ஒழியாராய் விலங்கி வெகுளவும் மலர்நிறையும் கிடங்கிலே மிக்கோடும் அழகியசோரியற்று அம்பின்வாயிலே பட்டார் அநேகர். எ - று. (௧௭)

ஏணிநிலை :—

தொடுகழன் மறவர் துன்னித் துன்னா
ரிடுசூட் டிஞ்சியி னேணிசாத் தின்று.

இ - ள். இட்ட வீரக்கழலினையுடைய கொடுவினையாளர் செறிந்து செறியாதார்பண்ணின ஏவறைகளையுடைய மதிலிலே ஏணியைச்சாத்தியது. எ - று.
சூட்டு மாலையென்றுமாம்.

வ - று. கற்பொறியும் பாம்புங் கனலுங் கடிகுரங்கும்
விற்பொறியும் வேலும் விலக்கவும் - பொற்புடைய
பாணி நடைப்புரவிப் பல்களிற்றார் சாத்தினா
ரேணி பலவு மெயில்.

இ - ள். இடங்கணியும் அரவும் நெருப்பும் கடிகுரங்கும் வில் இயந்திரமும் அயிலும் இவையனைத்தும் பகைவர் உட்புகுதாதபடி விலக்கவும் பொலிவினையுடைய தாளத்திற்கொக்கச் சதிபாயும் குதிரையினையும் பலயானையினையுமுடைய உழிஞையார் இட்டார்; அரணிடத்து ஏணிபலவும். எ - று.
ஏணிபலவும் சாத்தினாரென்க. (௧௮)

எயிற்பாசி :—

உடல்சினத்தார் கடியாணை
மிடல்சாய மேலிவர்ந்தன்று.

* கிடங்கினு ளென்றும் பாடம்.

இ - ள். முனையும்செற்றத்தினையுடையார் காவற்குறும்பு வலிகெட ஏணிமேல் ஏறியது. எ - று.

வ - று. சுடும ணெடுமதில் சுற்றிப் பிரியார்
கடுமுரா ணெஃகங் கழிய - வடுமுரா
ணாறினா ரன்றி யரவு முடும்பும்போ
லேறினா ரேணி பலர்.

இ - ள். செங்கலாற்செய்த நெடிய புரிசையைச்சூழ்ந்து நீங்காராய்க் கொடிய மாறுபாட்டினையுடைய வேல் மார்பிலேபட்டு உருவிப்போகக கொல்லும் மாறுபாடு ஆறினாரொழியப் பாம்பும் உடும்புமொப்ப ஏணிமேல் ஏறினார் அநேகர். எ - று.

ஆறினார் - பட்டார். 'அடுமுரணாறினாரன்றி' என்பதற்கு முரணாறுதென்றுமாம். (௧௯)

## முதுவுழிஞை :—

வேய்பிணங்கிய மிளையரணம்
பாய்புள்ளிற் பாய்ந்திழிந்தன்று.

இ - ள். மூங்கில் தலைமணந்த காவற்காட்டினையுடைய குறும்பிலே இரைண்டுபாயும் பறவையொப்ப வீரர் கைவளர்ந்து குதித்தது. எ - று.

வ - று. கோடுயர் வெற்பி னிலங்கண் டிரைகருதுந்
தோடுகொள் புள்ளின் *தொகையொப்பாங் - கூடார்
முரணகத்துப் பாற முழவுத்தோண் மள்ள
ரரணகத்துப் பாய்ந்திழிந்தா ரார்த்து.

இ - ள். குவடோங்கின மலையினின்றும் இரையைப் பூமியிலேகண்டு கருதிப் பாயும் தொகுதிகொண்ட பறவையின்குழுவையொப்பப் பகைவர் மாறுபாடு தம மனததேகெட முழவுபோலத்திரண்ட தோளையுடைய வீரர் அரணிடத்துப் பாய்ந்து இழிந்து ஆரவாரித்தார். எ - று. (௨௦)

## இதுவுமது.

செருமதிலோர் சிறப்புரைத்தலு
மருமுரணா னந்துறையாகும்.

இ - ள். போரைச்செய்யும் எயிலினுள்ளோருடைய மிகுதியைக்கூறலும் வெல்லுதற்கரிய மாறுபாட்டாலே முன்புசொன்ன துறையேயாம். எ - று.

வ - று. அறியார் வயவ ரகத்திழிந்த பின்று
நெறியார் நெடுமதிலுள் ளோரார் - மறியாங்
கிளியொடுநேராங் கிளவியார் வாட்கட்
களியுறு காமங் கலந்து.

---

* தொகையேய்ப்பவென்றும் பாடம்.

இ - ள். உணரார் நொச்சிவீரர்; அரணினுள்ளேபுகுந்தபின்னும், முட்டிக்குதல் றைந்த நெடும்புரிசையுட் பகைவர், மான்மறியாம், கிளியையொத்த சொல்லினை டையார் ஒளியினையுடைய கண்ணின்களிப்புற்ற வேட்கைவிரவுதலான். எ - று.
நேரார்மதிலகத்து இழிந்தபின்னும் வயவரறியார்; மறியாம்வாட்கண் எனக் .ட்டுக. (உ௧)

## அகத்துழிஞை:—

முரணவியச் சினஞ்சிறந்தோ
ரரணகத்தோனை யமர்வென்றன்று.

இ - ள். மாறுபாடுகெடக் கோபமிக்க உழிஞையார் எயிலினுள் நொச்சி ானைப் போரைவென்றது. எ - று.

வ - று. செங்கண் மறவர் சினஞ்சொரிவாள் சென்றியங்க
வங்கண் விசும்பி னணிதிகழுந் - திங்கண்
முகத்தா ரலற முகிலுரிஞ்சுஞ் சூழி
யகத்தானை வென்றா ரார்.

இ - ள். சிவந்தகண்ணினையுடையவீரர், செற்றத்தைப்பொழியும் வாள்போ லாவ அழகிய இடத்தையுடைய ஆகாயத்தின் அலங்காரமிகும் மதியையொத்த தனத்தினையுடையார் கூப்பிட மேகந்தவழும் நெற்றியினையுடைய அரணினுள் ளானைப் போர்வென்றார். எ - று. (உஉ)

## முற்றுமுதிர்வு:—

அகத்தோன் காலை யதிர்முரசியம்பப்
புறத்தோன் வெஞ்சினப் பொலிவுரைத் தன்று.

இ - ள். மதிலின்உள்ளோனுடைய முழங்குமுரசு காலையிலொலிப்பப் புறத் திருந்த உழிஞையானது வெய்யகோபத்தின்மிகுதியைச் சொல்லியது. எ - று.

வ - று. காலை முரச மதிலியம்பக் கண்கனன்று
வேலை விறல்வெய்யோ னோக்குதலு - மாலை
யடுக மடிசிலென் றம்மதிலு ளிட்டார்
தொடுகழலார் மூழை துடுப்பு.

இ - ள். நாட்காலையே முரசு அரணின்கணொலிப்பக் கண்சிவந்து வேலை வெற்றியைவேண்டுவோன் பார்த்தானாக, மாலைப்பொழுது அடுவேம் சோறென்று சொல்லி அவ்வரணினுக்குள்ளே எறிந்தார் கட்டுங்கழலினையுடையார், *மூழையினையும் துடுப்பினையும். எ - று.
அம்மதிலுள்ளிட்டார், இதனை அழித்து இன்றுபோய் உண்பேமென்று. (உ௩)

## யானைகைக்கோள்:—

மாறுகொண்டார் மதிலழிய
வேறுந்தோட்டியு மெறிந்துகொண்டன்று.

---

* மூழை - அகப்பை.

**இ - ள். பகைகொண்டார் அரணங்கெட யானையையும் காவலையும் பகைவரையெறிந்து கைக்கொண்டது. எ - று.**

வ - று. ஏவ லிகன்மறவர் வீய விகல்கடந்து
காவலும் யானையுங் கைக்கொண்டான் - மாவலான்
வம்புடை யொள்வாண் மறவர் தொழுதேத்த
வம்புடை ஞாயி லரண்.

**இ - ள் தன்னேவலைச்செய்யாதவீரர்கெட மாறுபாட்டைக்கடந்து தோட்டியையும் களிற்றையும் கைப்பற்றினான் குதிரைத்தொழிலைவல்லவன்; கச்சினையுடைய ஒள்ளிய வாள்வீரர் பணிந்துவாழ்த்த, பகழியினையுடைய முடக்கறையாற் சிறந்த எயிலிடத்து. எ - று.**

ஏவல் - ஏவைவல்லவென்றுமாம். (உச)

## வேற்றுப்படைவரவு :—

மொய்திகழ் வேலோன் முற்றுவிட் டகலப்
பெய்தார் மார்பிற் பிறன்வர வுரைத்தன்று.

**இ - ள். போர்மிகும்வேலோன் சூழ்தல்விட்டுப்போக இட்ட மாலைமார்பினையுடைய வேற்றுவேந்தன்வரவினைச்சொல்லியது. எ - று.**

வ - று. உவனின் றுறுதுயர முய்யாமை நோக்கி
யவனென் றலரேத்து மாண்மை - யிவனன்றி
மற்றியார் செய்வார் மழைதுஞ்சு நீளரண
முற்றியார் முற்று விட.

**இ - ள். உவன் இற்றைநாளிலே பொருந்தும் விதனத்தினின்றும் ஒழியாமையைப்பார்த்து அப்படிக்கொத்தவனென்றுசொல்லி உயர்ந்தோர்புகழும் ஆண்மைத் தன்மையினையுடைய இவனல்லது மற்று யாவர் இதுசெய்யவல்லார்! மேகம் உறங்கும் நீண்ட மதிலைச் சூழப்போனார் வளைவுவிட. எ - று.** (உரு)

## உழுதுவித்திடுதல் :—

எண்ணார் பல்லெயில் கழுதையே ருழுவித்
துண்ணா வரகொடு கொள்வித் தின்று.

**இ - ள். பகைவருடைய பலஅரணும் கழுதையாகிய ஏரிட்டுழுது கவடியுடன் குடைவேலை விதைத்தது. எ - று.**

வ - று. எழுதெழின் மாடத் திடனெலா நூறிக்
கழுதையேர் கையொளிர்வேல் கோலா - வுழுததற்பின்
வெள்வரகு கொள்வித் திடினும் விளியாதாற்
கள்விரவு தாரான் கதம்.*

**இ - ள். சித்திரமெழுதிய அழகிய மாளிகைமுழுதும் இடித்துக் கழுதையே ஏராகவும் கையில்விளங்கும் வேலே கோலாகவும் உழுததற்குப்பின்பு கவடியும்**

---

*** இச்செய்யுளின் கருத்தைப் புறநானூறு, ௩௯௨ - ம் பாட்டிற்காண்க.**

டைவேலும் வித்திலும் கெடாதால்; தேன்கலந்த மாலையினையுடையவின் கோ
ம். எ - று. (உகூ)

வாண்மண்ணுநிலை :—

புண்ணிய நீரிற் புரையோ ரேத்த
மண்ணிய வாளின் மறங்கிளந் தன்று.

இ - ள் உயர்ந்தோர் துதிப்பத் தீர்த்தநீராலே மஞ்சனமாட்டிய வாளினது
ீரத்தைச் சொல்லியது. எ - று.

வ - று. தீர்த்தநீர் பூவொடு பெய்து திசைவிளங்கக்
கூர்ந்தவாண் மண்ணிக் கொடித்தேரான் - பேர்த்து
மிடியார் பணைதுவைப்ப விம்மதிலுள் வேட்டான்
புடையா ரறையப் புகழ்.

இ - ள். தீர்த்தநீரும் மலருஞ்சொரிந்து திக்குவிளங்கக் கூரியவாளினை மஞ்
ஙமாட்டிப் பதாகையாற்சிறந்த தேரினையுடையான் இரண்டாவதும் உருமேற்றை
ெயாக்கும் வீரமுரசு ஆர்ப்ப இந்த அரணிடத்தே களவேள்விவேட்டான், பக்கத்
துள்ள மன்னரெல்லாம் தன்கீர்த்தியைச்சொல்ல. எ - று. (உஎ)

மண்ணுமங்கலம் :—

வணங்காதார் மதிற்குமரியொடு
மணங்கூடிய மலிபுரைத் தன்று.

இ - ள். பணியாதாரரணாகிய கன்னியுடன் வதுவைபொருந்திய மிகுதியைச்
சொல்லியது. எ - று.

வ - று. எங்கண் மலர வெயிற்குமரி கூடிய
மங்கல நாள்யா மகிழ்தூங்கக் - கொங்கலர்தார்ச்
செய்சுடர்ப்பூண் மன்னவன் சேவடிக்கீழ் வைகினவே
மொய்சுடர்ப்பூண் மன்னர் முடி.

இ - ள். எம்முடையகண் மலர அரணாகியகன்னியினை மணந்த மணநாளி
லே யாம் மகிழ்ச்சியெய்த மதுவலரும் கோவைமாலையினையும் கையாற்செய்யப்
பட்டு ஒளிசிறந்த ஆபரணத்தினையுமுடைய வேந்தன் தாள்நிழற்கீழே தங்கின;
செறிந்த சோதியாணிறைந்த அணிகலத்தையுடைய அரசர்முடிகள். எ - று. ()

மகட்பாலிகல் :—

மயிற்சாயன் மகள்வேண்டிய
கயிற்கழலோ னிலையுரைத் தன்று.

இ - ள். மயில்போன்ற மென்மையினையுடைய மகளைவேண்டிய மூட்டுவா
யாற்சிறந்த வீரக்கழலினையுடையான் முறைமையைச் சொல்லியது. எ - று.

வ - று. அந்தழை யல்குலு மாடமை மென்றோளும்
பைந்தளிர் மேனியும் பாராட்டித் - தந்தை

*" கருதாதார் மதிற்குமரி" என்றார் முன்னும்.

புறமதில் வைகும் புலம்பே தருமே
பிறமதின் மன்னன் மகள்.

இ - ள். அழகிய *தழையாற்சிறந்த நிதம்பத்தினையும் அசையும் மூங்கில் போன்ற மெல்லியதோளினையும் பசந்தளிர்போன்ற நிறத்தினையும் கொண்டாடித் தமப்ப] னுடைய மதிற்புறத்துத் தங்கும் தனிமையையே கொடாநிற்கும்; வீரமே தனக்குப் புரிசையாகவுடைய வேந்தனிடத்து மகள். எ - று. (௨௯)

## திறைகொண்டுபெயர்தல் :—

அடுதிற லரணத் தரசு வழிமொழியப்
படுதிறை கொண்டு பதிப்பெயர்ந் தன்று.

இ - ள். கொல்லும்வலிமிகும் எயிலினிடத்து மன்னரெல்லாம் தாழ்வுசொல்ல முறைமையான திறையைக்கொண்டு இருந்த ஊரினின்றும் எடுத்துவிட்டது. எ - று.

வ - று. கோடும் வயிரு மிசைப்பக் குறுமுனை
யோடெரி வேய வுடன்றலாய்ப - பாடி
யுயர்ந்தோங் கரணத்த தொன்னார் பணியப்
பெயர்ந்தான் பெருந்தகையி னான்.

இ - ள். சங்கும் கொம்பும் முழங்கச் செறிந்த குறுங்காட்டைப் பரந்த எரி மூடக் கோபித்துக் கிளர்ந்து பாடிவீட்டினின்றும மிகஉயர்ந்த எயிலிடத்துப் பகைவர்தாழ எடுத்து மீள விட்டான், மிக்கஅழகினையுடையான். எ - று. (௩௦)

## அடிப்படவிருத்தல் :—

பேணாதார் மறங்கால
வாணைகொண் டடிபாடவிருந்தன்று.

இ - ள். பகைவர்தாம் சினத்தைத உமிழத் தன்ஆணையை ஏற்றுக்கொண்டு நாடு வழிப்பட நெடுங்காலம் இருந்த இருப்பிலே இருந்தது. எ - று.

வ - று. ஒன்றி யவர்நா டொருவழித்தாய்க் கூக்கேட்ப
வென்றி விளையா விழுமதிலோ - சென்றார்
பருந்தார் செருமலையப் பாடி பெயரா
திருந்தா னிகன்மறவ ரேறு.

இ - ள். பொருந்திய பகைவர்தேசம் ஒருவழிப்பட்டு ஏவல்கேட்பத் தங்கள் வெற்றியைத் தங்கள்பக்கல் உண்டாக்கமாட்டாத சீரியஅரணிடத்தோர் எந்நாளும்

---

*தழை - செங்கழுநீர்ப்பூ முதலியவற்றால் தொடுத்து இளையமகளிரணியும் உடைவிசேடம்; இதனை, "முடித்த குல்லைஇலையுடைய நறும்பூச், செங்கான் மராஅத்த வாலிண ரிடையிடுபு, சுரும்புணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை, திருந்துகா ழல்குற் றிளைப்ப வுடீஇ" என்னும் திருமுருகாற்றுப்படையாலும், புறநானூற்றின் ௬௧' ௧௧௬, ௨௪௮, ௩௪௦ - ம் பாட்டுமுதலிய வற்றாலும் உணர்க.

ருந்துநிறையும் பூசலைச் செய்யாநிற்பப் பாசறையைவிட்டு நீங்காது அவ்விருப்பி ல யிருந்தான், மாறுபாட்டாற் சிறந்த வீரருக்கு இடியேறனையான். எ - று. ()

## தொகைநிலை :—

எம்மதிலி னிகல்வேந்தரு
மம்மதிலி னடியடைந்தன்று.

இ - ள். எல்லா அரணிடத்துமுள்ள மாறுபாட்டு மன்னர்பலரும் அந்த எயிலி -த்தே அவன்பாதத்தைச் சேர்ந்தது. எ - று.

வ - று. நாவல் பெயரிய ஞாலத் தடியடைந்
தேவ லெதிரா திகல்புரிந்த – காவலர்
வின்னின்ற தானை விறல்வெய்யோற் கம்மதிலின்
முன்னின் றவிந்தார் முரண்.

இ - ள். சம்புத்தீவினுள் அவன்தாணிழலையடைந்து சொன்னசொல்லை ஏற் றுக்கொள்ளாது மாறுபாட்டை மேற்கொண்ட மன்னர் சிலைவலிநின்ற சேனையாற் சிறந்த வெற்றியைவேண்டுவோற்கு அவன்சூழ்ந்த அரணின்முன்னேநின்று கெட் டார், மாறுபாடு. எ - று.

நாவல்பெயரியஞாலம் - நாவலின்பெயர்பெற்றபூமி=சம்புத்தீவு. (௩௨)

ஆறுவது

உழிஞைப்படல முற்றிற்று.

---

ஏழாவது

# தும்பைப்படலம்.

---

துன்னருங் கடும்போர்த் தும்பை தும்பை யரவந்
தன்னிக ரில்லாத் தானை மறமே
யானை மறங்கொடு குதிரை மறமே
தார்நிலை தேர்மறம் பாணது பாட்டே
யிருவருந் தபுநிலை யெருமை மறமே
யேம வெருமை நூழி லென்று
நூழி லாட்டே முன்றேர்க் குரவை
பின்றேர்க் குரவை பேய்க்குர வையே
களிற்றுட னிலையே யொள்வா ளமலை
தானை நிலையே வெருவரு நிலையே

சிருங்கார நிலையே யுவகைக் கலுழ்ச்சி
தன்னை வேட்ட றொகைநிலை யுளப்பட
நன்பொரு டெரிந்தோர் நாலிரு மூன்றும்
வண்பூந் தும்பை வகையென மொழிப.

எ - ன், தும்பைத்திணையும் துறையுமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள். தும்பை, தும்பையரவம், தானைமறம், யானைமறம், குதிரைமறம், தார்நிலை, தேர்மறம், பாண்பாட்டு, இருவருந்தபுநிலை, எருமைமறம், ஏமவெருமை, நூழில், நூழிலாட்டு, முன்றேர்க்குரவை, பின்றேர்க்குரவை, பேய்க்குரவை, களிற்றுடனிலை, ஒள்வாளமலை, தானைநிலை, வெருவருநிலை, சிருங்காரநிலை, உவகைக் கலுழ்ச்சி, தன்னைவேட்டல், தொகைநிலை என இருபத்திரண்டும் தும்பைத்திணையும் துறையுமாம். எ - று.

## தும்பை :—

செங்களத்து மறங்கருதிப்
பைந்தும்பை தலைமலைந்தன்று.

இ - ள். குருதியாற்சிவந்தகளத்து மாறுபாட்டைநினைந்து பசுந்தும்பையாகிய போர்ப்பூவை முடியிடத்துச்சூடியது. எ - று.

வ - று. கார்கருதி நின்றதிருங் கௌவை விழுப்பணையான்
சோர்குருதி சூழா நிலநனைப்பப் - போர்கருதித்
துப்புடைத் தும்பை மலைந்தான் றுகளறுசீர்
வெப்புடைத் தானையெம் வேந்து.

இ - ள். மேகத்தை ஒப்புக்குறித்து ஒழியாதுநின்று முழங்கும் ஆரவாரத்தாற் சிறந்த சீரிய வீரமுரசினையுடையான், ஒழுகுங்குருதி சூழ்ந்து பொருகளத்தை நனைப்பப் பூசலைநினைந்து வலியையுடைய தும்பைமாலையைச்சூடினான்; குற்றந்தீர்ந்த புகழினையும் வெம்மைமிக்க சேனையினையுமுடைய எம்மன்னன். எ - று. (க)

## தும்பையரவம் :—

பொன்புனைந்த கழலடியோன்
றன்படையைத் தலையளித்தன்று.

இ - ள். அழகணிந்த வீரக்கழற்காலினையுடையான் தனதுசேனையைத் தலையளிபண்ணியது. எ - று.

வ - று. வெல்பொறியு நாடும் விழுப்பொருளுந் தண்ணடையுங்
கொல்களிறு மாவுங் கொடுத்தளித்தான் - பல்புரவி
நன்மணித் திண்டேர் நயவார் தலைபனிப்பப்
பன்மணிப் பூணான் படைக்கு.

இ - ள். போர்வெல்லும் அடையாளமும் *பற்றும் சிறந்ததனமும் மருத நிலமும் கொல்லும்யானையும் குதிரையும்வழங்கி அருள்செய்தான்; புலபரியினையும் நல்ல மணியிடைந்த திண்ணியதேரினையுமுடைய பகைஞர் அஞ்சித் தலைகடுங்க, நவமணி அழுத்தின ஆபரணத்தினையுடையான், சேனைக்கு. எ - று. (உ)

## தானைமறம் :—

தாம்படைத் தலைக்கொள்ளாமை
யோம்படுத்த வுயர்புகூறின்று.

இ - ள். பொர எதிர்ந்த இருவகைச்சேனை தாம் பொருதுமடியாமை பரிகரித்த ஆற்றலினது உயர்ச்சியைச்சொல்லியது. எ - று.

வ - று. கழுதார் பறந்தலைக் கண்ணுற்றுத் தம்மு
ளிழுதார்வேற் றானை யிகலிற் - பழுதாஞ்
செயிர்காவல் பூண்டொழுகுஞ் செங்கோலார் செல்வ
முயிர்காவ லென்னு முரை.

இ - ள். பேய்மிக்க போர்க்களத்தைக்கிட்டித் தம்மில்தாம் நெய்யணிந்த வேற்படை மாறுபடிற் குற்றமாம்; குற்றத்தை உலகிற்புகுதாமற் காத்துநடக்கும் நீதியையுடைய மன்னர்தம்செல்வமாவது பல உயிரையும் காத்தலென்றறிந்து சொல்லும் சொல். எ - று.

சொல் பழுதாம். இகலின் இருவரரசர்சேனையும் தோலாதுமடியும். இனி ஒருவன்சேனை தம்முள் மாறுபடுதலென்றுமாம். (ங)

இதுவுமது.

பூம்பொழிற் புறங்காவலை
யோம்படுத்தற்கு முரித்தெனமொழிப.

இ - ள். பொலிவுபெற்ற பூமிகாவலற்கு உறுதிகூறுதற்கும் பெறும் அதுவென்றசொல்லுவர். எ - று.

வ - று. வயிர்மேல் வளைஞரல வைவேலும் வாளுஞ்
செயிர்மேற் கனல்விழிப்பச் சீறி - யுயிர்மேற்
பலகழியு மேனும் பரிமான்றேர் மன்னர்க்
குலகழியு மோர்த்துச் செயின்.

இ - ள். கொம்போசையின்மேற்படச் சங்குமுழங்கக் கூர்த்தவேலும்வாளும் போரிடத்து நெருப்புப்பரப்ப வெகுண்டு உயிரிடத்துக் கொலைக்குற்றம் பலகழியு

---

* பற்று - பலவூர்களையுடைய சிறுநாடு. இதனை, சிவஞானசித்தியார் பரபக்கத்தில் "ஒருவனென்றேதப்பட்டான்" என்னும் திருவிருத்தத்திற்குத் தத்துவப்பிரகாசரெழுதிய விசேடவுரையாலும், பழைய சிலாசாதனங்களாலும் வரிசைப் பற்று கோயிற்பற்று என்று வழங்கும் பெயர்களாலும் உணர்க.

மாயினுஞ் செலவையயர்ந்த குதிரையாற்பூட்டப்பட்ட தேர்வேந்தர்க்கு விசாரித்துச்செய்யின் பூமியழியும். எ - று.

படைபடும், கெடுமென்று ஓராது பூசற்செய்யவேண்டும். (௪)

இதுவுமது.

வேற்றானை மறங்கூறி மாற்றா ரழிபிரங்கின்று
மாற்றி னுணரி னத்துறை யாகும்.

இ - ள். வேற்படையினது தறுகண்மையைச்சொல்லிப் பகைவருடைய கேட்டிற்குநோவினும் முறைமையாக விசாரித்துரைப்பின் அதுவேயாம். எ - று.

வ - று. மின்னார் சினஞ்சொரிவேன் மீளிக் கடற்றானை
யொன்னார் நடுங்க வுலாய்நிமிரி - னென்னாங்கொ
லாழித்தேர் வெல்புரவி யண்ணன் மதயானைப்
பாழித்தோண் மன்னர் படை.

இ - ள். ஒளிநிறைந்த செற்றம்பொழியும் வேலினையும் தலைமையினையுமுடைய கடல்போன்றசேனை பகைவர் தலைபணிப்ப நிலைபெயர்ந்தாடப்பின் என்படுமோ! வட்டக்காலாற்சிறந்த தேரினையும் வெல்லுங்குதிரையினையும் தலைமை பெற்ற மதகளிற்றினையும் வலியதோளினையுமுடைய பகைவர்சேனை. எ - று. (௫)

யானைமறம் :—

எழுமரவக் கடற்றானையான்
மழகளிற்றின் மறங்கிளந்தன்று.

இ - ள். மிகும் ஆரவாரத்தால்நிறைந்த கடல்போன்ற சேனையினையுடையான் இளங்களிற்றினது மறத்தைக் கூறியது. எ - று.

வ - று. அடக்கருந் தானை யலங்குதார் மன்னர்
விடக்கு முயிரு முணிய - கடற்படையுட்
பேயு மெருவையுங் கூற்றுந்தன் பின்படரக்
காயுங் கழலான் களிறு.

இ - ள். விலக்குதற்கரிய சேனையினையும் விளங்கும் கோவைமாலையினையுமுடைய அரசர் தசையினையும் உயிரினையும் உண்ணவேண்டிக் கடல்போன்றசேனையுட் பேயும் கழுகும் கூற்றும் தனதுபின்செல்ல வெகுளும், வீரக்கழல்வேந்தன் யானை. எ - று.

பேயும் எருவையுங் விடக்குண்ணப்பின்படரவென்க. (௬)

குதிரைமறம் :—

எறிபடையா னிகலமருட்
செறிபடைமான் றிறங்கிளந்தன்று.

இ - ள். எறியும்வேற்படையுடையான்றன் மாறுபாட்டினைச்செய்யும் போருட் செறிந்த[கலை]யினையுடைய குதிரையின்திறப்பாட்டைச் சொல்லியது. எ - று.

வ - று. குந்தங் கொடுவிற் குருதிவேல் கூடாதார்
வந்த வகையறியா வாளமருள் - வெந்திற
லார்கழன் மன்ன னலங்குளைமா வெஞ்சிலை
வார்கணையின் முந்தி வரும்.

இ - ள். **பகைவர்தம் சவளப்படையும் கொடியவிற்படையும் உதிரத்தை யளைந்தவேற்படையும் வந்தபடி அறியாதவகை தலைமயங்கிய வாட்போருள் வெய்ய வலியினையும் நிறைந்தவீரக்கழலினையுமுடைய மன்னன் விளங்கும் தலையாட்டத் தினையுடையகுதிரை, கொடியவில்லில் தொடுத்துவிட்ட நீண்ட அம்புபோல முற் பட்டுவரும்.** எ - று. (எ)

## தார்நிலை :—

முன்னெழுதரு படைதாங்குவனென
மன்னவற்கு மறங்கிளந்தன்று.

இ - ள். *தூசிப்படையைத் தடுப்பனென* **அரசற்கு ஒருவீரன் தனது தறு கண்மையைச்சொல்லியது.** எ - று.

வ - று. உறுசுடர் வாளோ டொருகால் விலங்கிற்
சிறுசுடர்முற் பேரிருளாங் கண்டாய் - எறிசுடர்வேற்
றேங்குலாம் பூந்தெரியற் றேர்வேந்தே நின்னொடு
பாங்கலா மன்னர் படை.

இ - ள். *மிக்க ஒளியினையுடையவாளுடனே யான் ஒருகால்தடுப்பிற் சிறிய விளக்கின்முன்னாப் பெரிய இருள்போல நீங்கிப்போம் காண்; எறியும் கதிர்வே லினையும் மதுமலர்ந்த பூமாலையினையுமுடைய தேர்மன்னனே, நின்னொடு உறவல் லாத வேந்தர்சேனை.* எ - று. (அ)

இதுவுமது.

ஒருகுடை மன்னனைப் பலகுடை நெருங்கச்
செருவிடைத் தமியன் றாங்கற்கு முரித்தே.

இ - ள். **ஒருகுடைவேந்தனைக் குடைவேந்தர்பலர் அடையப் போரிடத்துத் தனிவீரன்தானே தடுத்தற்குமுரித்து அத்துறை.** எ - று.

வ - று. காலான் மயங்கிக் கதிர்மறைக்குங் கார்முகில்போல்
வேலான்கை வேல்விட வீழ்ந்தனவே - தோலா
விலைபுனை தண்டா ரிறைவன்மேல் வந்த
மலைபுரை யானை மறிந்து.

இ - ள். **காற்றுல்நிலைகுலைந்து ஆதித்தனைமறைத்த கருமுகில்போல, வேல் வீரனகையகத்து வேல்படுதலால் வீழ்ந்தன; தோலாத இலையாற்றொடுத்த குளிர் ந்த மாலையினையுடைய அரசன்மேற் சென்ற *மலையையொத்த ஆனை கீழ்மேலாய்.** எ - று.

---

* மலையையொத்த அயிராபதமெனவும் பிரதிபேதமுண்டு.

வீந்தவென்பது இடவழுவமைதி.
கார்முகில்போற்சென்றயானையென்க. (௯)

## தேர்மறம் :—

முறிமலர்த்தார் வயவேந்தன்
செறிமணித்தேர்ச் சிறப்புரைத்தன்று.

இ - ள். தளிர்விரவின பூமாலையினையுடைய வலியமன்னன் மிடைந்தமணித் தேரின் தன்மையைச்சொல்லியது. எ - று.

வ - று. செருமலி வெங்களத்துச் செங்குருதி வெள்ள
மருமுரா ணழி தொடர - வருமரோ
கட்டார் கமழ்தெரியற் காவலன் காமர்தே
ரொட்டார் புறத்தின்மே லூர்ந்து.

இ - ள். போர்மிகும் வெய்யபறந்தலையிடத்துச் சிவந்த உதிரவெள்ளம் இட்டு தற்கரிய மாறுபாட்டினையுடைய தேர்க்காலைத்தொடர வாராநிற்கும்; சுறறுதல் நிறைந்த நாறுமாலையினையுடைய அரசன்றன் அழகியதேர் பகைவர்பிணப்புறத்தின் மேல் நடந்து. எ - று.

அரோ - அசை. (௧௦)

## பாண்பாட்டு :—

வெண்கோட்ட களிறெறிந்து செங்களத்து வீழ்ந்தார்க்குக்
கைவல்யாழ்ப் பாணர் கடனிறுத் தன்று.

இ - ள். விளர்த்தகொம்பினையுடைய யானையையெறிந்து பறந்தலையிற் பட்டார்க்கு யாழ்வாசிக்கும் கைத்தொழிலில்வல்ல பாணர் உரிமைசெய்தது. எ - று.

வ - று. தளரிய ருய்புதல்வர் தாமுணா ராமைக்
களரிக் கனன்முழங்க மூட்டி - விளரிப்பண்
கண்ணினார் பாணர் களிறெறிந்து வீழ்ந்தார்க்கு
விண்ணினார் செய்தார் விருந்து.

இ - ள். தளர்ந்த இயல்பினையுடைய தம்மனைவி தாய் சிறுவர் இவர்தாம் போர்க்களத்துப் பட்டவாறு அறியாமையாற் பறந்தலையிலே நெருப்பை முழங்க மூட்டிச் சாப்பண்ணைப் பாடக் கருதினார் பாணர், யானையை எறிந்து பட்டவீரர்க்கு; துறக்கத்துள்ளார் விருந்திடுதல்செய்தார். எ - று. (௧௧)

## இருவருந்தபுநிலை :—

பொருபடை களத்தவிய
இருவேந்தரு மிகலவிந்தன்று.

இ - ள். போர்செய்யும்சேனையிரண்டும் களத்திற்பட இருவரரசரும் மாறு பாட்டாற்பட்டது. எ - று.

வ - று. காய்ந்து கடுங்களிறு கண்கனலக் கைகூடி
வேந்த ரிருவரும் விண்படர - வேந்து
பொருபடை மின்னப் புறங்கொடா பொங்கி
யிருபடையு நீங்கா விகல்.

இ - ள். கனன்று கடியயானை கண்ணழலக் கண்ணுற்ற அரசரிருவரும் விண்ணைச்சேர எடுக்கும் போர்செய்யும் படை ஒளிவிட வென்னிடாவாகி வெகுண்டு இரண்டுசேனையும் ஒழிவாவாயின, மாறுபாட்டை. எ - று.

அரசும் படையுமடிந்தவாம். (கஉ)

## எருமைமறம் :—

வெயர்பொடிப்பச் சினங்கடைஇப்
பெயர்படைக்குப் பின்னின்றன்று.

இ - ள் வேரரும்பச் சினத்தைக்கடாவி முதுகிட்ட தன்சேனைக்குப்பின்னே நின்றது. எ - று.

வ - று. கடுங்கண் மறவன் கனல்விழியாச் சீறி
நெடுங்கைப் பிணத்திடை நின்று - னடுங்கமரு
ளாள்வெள்ளம் போகவும் போகான்கை வேலூன்றி
வாளவெள்ளந் தன்மேல் வர.

இ - ள். தறுகண்வீரன் நெருப்புப்போலவிழித்துக் கோபித்து யானைப்பிணத்தின்நடுவேநின்முன்; கண்டார்நடுங்கும்போரிடத்துக் காலாள்வெள்ளம் இரிந்தோடவும் போகாறுகித் தன்கைவேலையூன்றி, பகைவர்வாட்படைவெள்ளம் தன்மேலே அடர்ந்துவர. எ - று. (கரு)

## ஏமவெருமை :—

குடைமயங்கிய வாளமருட்
படைமயங்கப் பாழிகொண்டன்று.

இ - ள். மன்னர்குடைகள் தம்மில் தலைமயங்கிய வாட்போருள் தாமெறிந்த வேல் பொருகளிற்றின் மத்தகத்துக்குளிப்பத் தோள்வலியால் வென்றிகொண்டது. எ - று.

வ - று. மருப்புத்தோ ளாக மதர்விடையிற் சீறிச்
செருப்புகன்று செங்கண் மறவன் - நெருப்பிமையாக்
கைக்கொண்ட வெஃகங் கடுங்களிற்றின் மேற்போக்கி
மெய்க்கொண்டான் பின்னரு மீட்டு.

இ - ள். தோளே கொம்பாக மதர்த்த எருமையேறுபோல வெகுண்டு போரைவிரும்பிச் சிவந்தகண்ணினையுடையமறவன், பொறிபிறப்பவிழித்துக் கையிலேந்தியவேலைக் கடியயானைமேல்விட்டு முன்பு வென்றிகொண்டவாறுபோல நிராயுத

ருகின்று மெய்வலியாற் பின்னரும் வென்றிகொண்டான்; மேல்வரும் படையை விலக்கி. எ - று.

"படைமறத்துப் பாழிகொள் ளும்மே" என்றாராசிரியர். (௧௪)

## நூழில்:—

கழல்வேந்தர் படைவிலங்கி
யழல்வேறிரித் தாட்டமர்ந்தன்று.

இ - ள். வீரக்கழன்மன்னர் சேனையைக்கொன்று அழலும்வேலைத்திரித்து ஆடுதலைவிரும்பியது. எ - று.

வ - று. ஆட லமர்ந்தா னமர்வெய்யோன் வீழ்குடர்
சூடன் மலிந்த சுழல்கட்பேய் - மீடன்
மறந்தவேன் ஞாட்பின் மலைந்தவர் மார்பந்
திறந்தவேல் கையிற் றிரித்து.

இ - ள். ஆடுதலை மேற்கொண்டான் போரைவிரும்பினோன்; வீழ்ந்தகுடரைச் சூடுதலை மேற்கொண்டன சுழலும்விழியினையுடைய பேய். மீளுதலொழிந்த வேற்போருள் மாறுபட்டவர் மார்பத்தை உருவினவேலைக் கையிலேதிரித்து, எ - று.

## நூழிலாட்டு:—

களங் கழுமிய படையிரிய
*வுளங்கழிந்த வேல்பறித்தோச்சின்று.

இ - ள். பொருகளத்தைப்பொருந்திய சேனைகெடத் தன்மார்பத்தைத்திறந்த வேலைப்பறித்து எறிந்தது. எ - று

வ - று. மொய்யகத்து மன்னர் முரணினி யென்னாங்கொல்
கையகத்துக் கொண்டான் கழல்விடலை - வெய்ய
விடுசுடர் சிந்தி விரையகலம் போழ்ந்த
படுசுட ரெஃகம் பறித்து.

இ - ள். போரிடத்து வேந்தர்மாறுபாடு இனி என்னாமோ! கையிடத்துப் பற்றினன் கழல்வீரன்; வெய்தான மிகுங்கனலைச்சிதறி மணநாறுமார்பத்தைப் போழ்ந்த தோன்றும் ஒளிவேலைப் பறித்து. எ - று. (௧௫)

## முன்றேர்க்குரவை:—

எழுவுறழ் திணிதோள் வேந்தன் வெஃறேர்
முழுவலி வயவர் முன்னா டின்று.

இ - ள். கணையத்தையொத்த திண்ணியதோளினையுடைய மன்னனுடைய வெல்லுந்தேர்முன் நிறைந்த வலியாற்சிறந்த வீரர் ஆடியது. எ - று.

---

* உளங்கிழித்தவென்றும் பாடம்.

வ - று. ஆறு வயவர்முன் னாட வமர்க்களத்து
வானூர்மின் னாகி வழிநுடங்கு - நோனாக்
கழுமணிப் பைம்பூட் கழல்வெய்யோ னூருங்
குழுமணித் திண்டேர்க் கொடி.

இ - ள். அமையாத வீரர்முன்னேயாடப் போர்க்களத்து மேகத்துநிறைந்த மின்போன்று முறைமையேயாடும்; பகைபொறாத கழுவுமணியானமைந்த பசும்பூணினையுடைய கழல்வேந்தன் நடத்தும் திரண்டமணியினையுடைய திண்ணிய தேர்மேற்கொடி. எ - று. (கஎ)

## பிணநேர்க்குரவை :—

கருங்கழன் மறவரொடு வெள்வளை விறலியர்
பெருந்தகை தேரின் பின்னா டின்று.

இ - ள். பெரிய கழல்வீரரோடு விளர்த்த வளையினையுடைய பாணிச்சியர் பெரிய மேம்பாட்டினையுடையான்றனது தேரின்பின் ஆடியது. எ - று.

வ - று. கிளையாய்ந்து பண்ணிய கேள்வியாழ்ப் பாணும்
வளையா வயவரும் பின்னாந் - தொளையாய்ந்
திசைவிளங்கும் பாடலொ டாட வருமே
திசைவிளங்குந் தானையான் றேர்.

இ - ள். கிளைநரம்பை ஆராய்ந்தமைத்த சுருதியான்மிக்க யாழைவல்ல பாண்கிளையும் தோலாவீரரும் பின்பாக இசையை ஆராய்ந்து தூக்குதல்விளங்கும் பாடலுடனே அவர்கூத்தாட வரும்; திக்கிலேவிளங்கும் சேனையையுடையான்றனது தேர். எ - று.

பாண் என்பது சாதிப்பெயர். (கஅ)

## பேய்க்குரவை .—

மன்ன னூரு மறமிகு மணித்தேர்ப்
பின்னு முன்னும் பேயா டின்று.

இ - ள். அரசன்செலுத்தும் கொடுமைமிக்க மணியையுடைய தேரின்பின்பும் முன்பும் பேய்ஆடியது. எ - று.

வ - று. முன்னரும் பின்னரு மூரிக் கடற்றானை
மன்ன னெடுந்தேர் மறனேத்தி - யொன்னார்
நிணங்கொள்பேழ் வாய நிழல்போ னுடங்கிக்
கணங்கொள்பே யாடுங் களித்து.

இ - ள். முன்னும்பின்னும், பெரிய கடல்போன்றசேனையையுடைய அரசன் நெடிய தேரின்மாறுபாட்டைவாழ்த்திப் பகைவரது நிணத்தைக்கொண்ட பெரிய வாயினையுடைய சாயைபோல அசைந்து திரண்டபேய் மகிழ்ந்து நடமாடும். எ - று. (கசு)

## களிற்றுடனிலை :—

ஒளிற்றெஃகம் படவீழ்ந்த
களிற்றின்கீழ்க் கண்படுத்தின்று.

இ - ள். ஒளியையுடைய வேலபடைதலான வீழ்ந்த யானையின்கீழ்ப் பட்டது. எ - று.

ஒளிற்றெஃகம் - விகாரம்

வ - று. இறுவரை வீழ வியக்கற் றவிந்த
தறுகட் டகையரிமாப் போன்றான் - சிறுகட்
பெருங்கைக் களிறெறிந்து பின்னதன்கீழ்ப் பட்ட
கருங்கழற் செவ்வேலவன்.

இ - ள். பெரியமலை முறிந்துவீழப் போக்கற்றுப் பட்ட கொடுமைத்தொழிலின் மேம்பாட்டினையுடைய சிங்கத்தை ஒத்தான்; சிறிய கண்ணினையும் பெரிய கையினையுமுடைய ஆனையையெறிந்து பின்னர் அதன்கீழ்ப்பட்ட வலியவீரக்கழலினையும் சிவந்தவேலினையுமுடையவன் எ - று. (௨௰)

## ஒள்வாளமலை :—

வலிகெழுதோள் வாளமலை
ஒலிகழலா னுடனாடின்று.

இ - ள். உரம்பொருந்திய தோளினையுடைய வாள்வீரர் ஆர்க்கும் வீரக்கழலினையுடையானுடன் ஆடியது எ - று

வ - று. வாளை பிறழுங் கயங்கடுப்ப வந்தணையார்
ஆளமர் வென்றி யடுகளத்துத் - தோள்பெயராக்
காய்ந்தடு துப்பிற் கழன்மறவ ராடினார்
வேந்தொடு வெள்வாள் விதிர்த்து.

இ - ள். வாளைமீன்மிளிரும் மடுவினையொப்ப, வந்து பொருந்தாதார் வீரமேவும் வெற்றியினையுடைய கொலைக்களத்துத் தோளைப்பெயர்த்து வெகுண்டு கொல்லும்வலியினையுடைய கழல்வீரர் ஆடினார், அரசனுடனே விளர்த்தவாளினை அசைத்து. எ - று. (௨க)

## தானைநிலை :—

இருபடையு மறப்புகழச்
பொருகளத்துப் பொலிவெய்தின்று.

இ - ள். இரண்டுசேனையும் மறத்தை ஏத்தப் போர்க்களத்துச் சிறப்பெய்தியது. எ - று.

வ - று நேரார் படையி னிலைமை நெடுந்தகை
யோரா னுறைசழியா னொள்வாளுந் - தேரார்க்கும்
வெம்பரிமா வூர்ந்தார்க்கும் வெல்களிற்றின் மேலார்க்குங்
கம்பமா நின்றான் களத்து.

இ - ள். பகைவர்சேனையின் உரத்தைப் பெரிய மேம்பாட்டினையுடையவன விசாரியான், வாளும் உறையினின்றும்வாங்கான், தேர்வீரர்க்கும் வெய்ய செலவினையுடைய குதிரையைச்செலுத்தினார்க்கும் வெல்லும் யானையின்மேலார்க்கும் மலைத்தூண்போலக் களத்தின்கண்நின்றான். எ - று.

கம்பம் - நடுக்கமுமாம். (உஉ)

## வெருவருநிலை :—

விலங்கமருள் வியலகலம் வில்லுதைத்த கணைகிழிப்ப
நிலந்தீண்டா வகைப்பொலிந்த நெடுந்தகை நிலையுரைத்தன்று.

இ - ள். பகையைத்தடுக்கும்பூசலிடத்து அகன்றமார்பகத்தை வில்லுமிழ்ந்த அம்புபிளப்ப நிலத்தைத்தீண்டாதபடி சிறந்த பெரிய மேம்பாட்டினையுடையான் றனது நிலைமையைச் சொல்லியது. எ - று.

வ - று. வெங்கண் முரசதிரும் வேலமருள் வில்லுதைப்ப
வெங்கு மருமத் திடைகுளிப்பச் - செங்கட்
புலவா ணெடுந்தகை பூம்பொழி லாகங்
கலவாமற் காத்த கணை.

இ - ள். வெவ்விய கண்ணினையுடைய முரசுமுழங்கும் வேற்போருள் விற்செலுத்த உயிர்நிலையான எவ்விடத்தும் தைப்பச் சிவந்தகண்ணினையும் புலால்நாறும் வாளினையுமுடையனுகிய பெரிய தகைமையாற்சிறந்தவன் பொலிவுபெற்ற பார்மடந்தைமார்பினைக் கூடாதபடி, ஏற்றுக்கொண்டன அம்பு. எ - று.

வில்லுதைப்பத் தைத்துருவின அம்பு காத்தவென்க. (உரு)

## சிருங்காரநிலை :—

பகைபுறங் கிடந்தானை
முகைமுறுவலார் முயங்கியர்ந்தன்று.

இ - ள். பகைவர் சீர்தகிபண்ணைக்கிடந்தானை முல்லையரும்பன்ன பல்லினார் தழுவுதலை மேவியது. எ - று.

வ - று. எங்கணவ னெங்கணவ னென்பா ரிகல்வாடத்
தங்கணவன் றார்தம் முலைமுகப்ப - வெங்கணைசேர்
புண்ணுடை மார்பம் பொருகளத்துப் புல்லினார்
நுண்ணிடைப் பேரல்குலார்.

இ - ள். எம்முடையகணவன் எம்முடையகணவனென்றுசொல்லும் பரத்தையர் மாறுபாடுகெடத் தமதுகொழுநன்மாலை தம்முலைமுகந்துகொள்ள வெய்ய அம்புபட்ட புண்ணினையுடையமார்பைப் போர்க்களத்துத் தழுவினார்; நுண்ணிய இடையினையும் பெரிய அல்குலினையுமுடைய குலமகளிர். எ - று.

எங்கணவனெங்கணவ னென்பார் - தெய்வமகளிரென்றுமாம். (உச)

### உவகைக்கலுழ்ச்சி :—

வாள்வாய்த்த வடுவாழ்யாக்கைக்
கேள்கண்டு கலுழ்ந்துவந்தன்று.

இ - ள். வாளால்வாய்ப்புப்பெற்ற விழுப்புண்மிக்க உடம்புடைய கணவனைக் கண்டு மனைவி மகிழ்ந்து கண்ணீர்வீழ்த்தது. எ - று.

வ - று. வெந்தொழிற் கூற்றமு நாணின்று வெங்களத்து
வந்த மறவர்கை வாடுமிப்பப் - பைந்தொடி
யாடரிமா வன்னான் கிடப்ப வகத்துவகை
யோடரிக்க ணீர்பா யுக.

இ - ள். வெய்ய செய்தியினையுடைய கூற்றமும் நம்மிடத்தும் இவ்வாறு மறமில்லையென்று மாணித்தது; வெவ்விய போர்க்களத்துப் போர்செய்யவந்த மறவர் கையிடத்துவாள் துணிசெய்யப் பச்சைவளையினையுடைய மனைவி தன் வென்றிச்சிங்கத்தையனைய கொழுநன்கிடப்ப அவன்வெற்றிக்கிடக்கைகண்ட உள்ளத்துமகிழ்ச்சியாற் செவ்வரிகருவரிபரந்த கண்ணகலமெல்லாம் நீர்பரந்துவீழ. எ - று.

உகக் கூற்றமுநாணின்றெனக. (உரு)

### தன்னைவேட்டல் :—

தம்மிறைவன் விசும்படைந்தெனை
வெம்முரணா னுயிர்வேட்டன்று.

இ - ள். தமதுவேந்தன் விசும்பைச் சேர்ந்தானாக, வெய்ய மாறுபாட்டையுடையானொருவீரன் உயிரை ஆகுதிபண்ணியது. எ - று.

வ - று. வான மிறைவன் படர்ந்தென வாடு[illegible]பா
மானமே நெய்யா மறம்விறகாத் - தேனிமிருங்
கள்ளவிழ் கண்ணிக் கழல்வெய்யோன் வாளம
ரொள்ளழலுள் வேட்டா னுயிர்.

இ - ள். விண்ணிடத்து வேந்தன் சென்றானாக, வாளே *சுருவமாக அபிமானமேநெய்யாக மறமே சமிதையாக வண்டுபரக்கும் மதுமலர்ந்தமாலையினையும் வீரக்கழலினையுமுடைய வெவ்வியோன் வாட்போராகிய ஒள்ளியதீயுள் உயிரை ஆகுதிபண்ணினான். எ - று. (உசு)

### இதுவுமது

காய்கதிர் நெடுவேற் கணவனைக் காணிய
வாயிழை சேறலு மத்துறை யாகும்.

இ - ள். பகையைச்சீக்கும் ஒளிநெடுவேலினையுடைய கொழுநனைக்காண வேண்டி அவன்பட்டபோர்க்களத்தில் அழகிய ஆபரணத்தையுடைய மனையாள் போயினதும் அத்துறையேயாம். எ - று.

---

*சுருவம் - நெய்த்துடுப்பு.

வ - று. கற்பின் விழுமிய தில்லைக் கடையிறந்
திற்பிறப்பு நாணு மிடையொழிய – நற்போ
ரணங்கிய வெங்களத் தாருயிரைக் காண்பான்
வணங்கிடை தானே வரும்.

இ - ள். கற்புடைமையிற் சீரியதொன்றில்லை; வாயிற்கடைக்கணின் குடிப் பிறப்பும் நாணமும் தன்னிடத்தைவிட்டுநீங்க நல்லபூசலிற்பட்ட சேனைப்பரப்பிற் கிடந்த தன்னுயிரையனையவன் உயிரைக் காணவேண்டி நுடங்கும் இடையாள் தமியளாய்வரும். எ - று.

ஒழியத் தானேவருமென்க. (உஎ)

## தொகைநிலை:--

அழிவின்று புகழ்நிறீஇ
யொழிவின்று களத்தொழிந்தன்று.

இ - ள். கேடின்றியேநிறையக் கீர்த்தியைநிறுத்தி எல்லாரும் போர்க்களத் திலே மடிந்தது. எ - று.

வ - று. மண்டமர்த் திண்டோண் மறங்கடைஇ மண்புலம்பக்
கண்டிரள்வேன் மன்னர் களம்பட்டார் - பெண்டிர்
கடிதெழு செந்தீக் கழுமினா ரின்னுங்
கொடிதேகா ணார்ந்தின்று கூற்று.

இ - ள். உறுபோரிடத்துத் திணணியதோளால் மாறுபாட்டைக்கடாவிப் பூமிதனிமைப்படக் காம்பு கண்டிரணட வேலினையுடைய வேந்தரிருவரும் போர்க் களத்துப்பட்டார்; அவர்தேவியரெல்லாம் கடிதாயெழும் செந்நெருப்பிற் கெழுமி னார்; இன்னமும் கொடுமையுடைத்தேகாண வயிறுநிறைந்தின்று கூற்றம். எ - று.()

ஏழாவது

தும்பைப்படலமுற்றிற்று.

---

## எட்டாவது

# வாகைப்படலம்.

---

சீர்சால் வாகை வாகை யரவ
மரச வாகை முரச வாகை
மறக்கள வழியொடு களவேள் வியே
முன்றேர்க் குரவை பின்றேர்க் குரவை
பார்ப்பன வாகை வாணிக வாகை

வேளாண் வாகை பொருந வாகை
யறிவன் வாகை தாபத வாகை
கூதிர்ப் பாசறை வாடைப் பாசறை
யரச முல்லை பார்ப்பன முல்லை
யவைய முல்லை கணிவன் முல்லை
மூதின் முல்லை யேறாண் முல்லை
வல்லாண் முல்லை காவன் முல்லை
பேராண் முல்லை மறமுல் லையே
குடைமுல் லையொடு கண்படை நிலையே
யவிப்பலி யென்று சால்பு முல்லை
கிணைநிலை யேனைப் பொருளொடு புகற
லருளொடு நீங்க லுளப்படத் தொகைஇ
மூன்று தலையிட்ட மூவீ ரைந்தும்
வான்றோய் வாகைத் திணையது வகையே.

எ - ன், வாகைத்திணையும் துறையுமாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள். வாகை, வாகையரவம், அரசவாகை, முரசவாகை, மறக்களவழி, களவேள்வி, முன்றேர்க்குரவை, பின்றேர்க்குரவை, பார்ப்பனவாகை, வாணிகவாகை, வேளாணவாகை, பொருநவாகை, அறிவன்வாகை, தாபதவாகை, கூதிர்ப்பாசறை, வாடைப்பாசறை, அரசமுல்லை, பார்ப்பனமுல்லை, அவையமுல்லை, கணிவன்முல்லை, மூதின்முல்லை, ஏறாண்முல்லை, வல்லாண்முல்லை, காவன்முல்லை, பேராண்முல்லை, மறமுல்லை, குடைமுல்லை, கண்படைநிலை, அவிப்பலி, சால்புமுல்லை, கிணைநிலை, பொருளொடுபுகறல், அருளொடுநீங்கல் என்று சொல்லப்பட்ட முப்பத்துமூன்றும் வாகைத்திணையும் துறையுமாம். எ - று.

வாகை :—

இலைபுனை வாகை சூடி யிகன்மலைந்
தலைகடற் றானை யரசட் டார்த்தன்று.

இ - ள். பச்சிலைவிரவித்தொடுத்த வாகைப்பூவைப்புனைந்து மாறுபாட்டை மேற்கொண்டு அலையுங்கடல்போன்ற சேனையினையுடைய வேந்தைக்கொன்று ஆரவாரித்தது. எ - று.

வ - று. சூடினான் வாகைச் சுடர்த்தெரியல் சூடுதலும்
பாடினார் வெல்புகழைப் பல்புலவர் - கூடா
ருடல்வே லழுவத் தொளிதிகழும் பைம்பூ
ணடல்வேந்த னட்டார்த் தரசு.

இ - ள். ஒளியாற்சிறந்த வாகைமாலையை மலைந்தான்; மலைந்தானைத் துதித்தார், பகைவெல்லும் கீர்த்தியை அறிவினையுடையோர் பலரும்; சத்துருக்களது

மாறுபாட்டினையுடைய அயிற்படைநடுவே ஒளிதிகழும் பசும்பொன்னாற் செய்யப்பட்ட ஆபரணத்தினையுடைய மாறுபாட்டுவேந்தன் அரசுகொன்று ஆரவாரித்து. எ-று.

ஆர்த்துச் சூடினனென்க. (க)

வாகையரவம்:—

வெண்கண்ணியுங் கருங்கழலுஞ்
செங்கச்சுந் தகைபுனைந்தன்று.

இ-ள். வெள்ளைமாலையினையும் வலியவீரக்கழலினையும் சிவந்தகச்சினையும் அழகுதாக அணிந்தது. எ-று.

வெண்கண்ணி - கொத்தான்வாகை.

வ-று. அனைய வமரு ளயில்போழ் விழுப்பு
ணினைய வினிக்கவலை யில்லை — புனைக
வழலோ டுமைக்கு மணங்குடைவாண் மைந்தர்
கழலோடு பூங்கண்ணி கச்சு.

இ-ள். அத்தனைமையவாகிய பூசலிலே வேலபிளந்த சீரியபுண் இத்தன்மைய வாயில; மேல் ஓர்துயரமில்லை, அணிக, நெருப்போடிலகும் பகைவாகரு வருத்தஞ்செய்தலையுடைய வாண்மள்ளர், வீரக்கழலினையும் பொலிந்த மாலையினையும் கச்சினையும. எ-று. (உ)

அரசவாகை:—

பகலன்ன வாய்மொழி
யிகல்வேந்த னியல்புரைத்தன்று.

இ-ள. நுகத்திற் பகலாணிபோன்ற நடுநிலைச்சொல்லினையுடைய மாறுபாட்டாற்சிறந்த மன்னனது தன்மையைச் சொல்லியது. எ-று.

வ-று. காவ லமைந்தான் கடலுலகங் காவலா
லோவ லறியா துயிர்க்குவகை - மேவருஞ்சீ
ரைந்தொழி லான்மறை முத்தீ யிருபிறப்பு
வெந்திறற் றண்ணளியெம வேந்து.

இ-ள், காவற்றொழிற்குச் சமைந்தான், கடல்சூழ்ந்த பூமியினை. இவன் காத்தலாலே ஒழிதலறியாது பலவுயிர்க்கும் மகிழ்ச்சி; பொருந்துதல்வரும் நன்மையினையுடைய ஐந்து தொழிலினையும் நான்குவேதத்தினையும மூன்றுதீயினையும பூணூலிடுவதற்கு முன்னும் பின்னுமாகிய இருபிறப்பினையும் 'பகைவரிடத்து வெவ்விய வினையினையும குளிர்ந்த அருளினையுமுடைய எம்முடைய வேந்தன். எ-று.

ஐந்துதொழில்: ஓதல், வேட்டல், ஈதல், படைக்கலம்பயிறல, பலவுயிரோம்பல்.

முரசவாகை:—

ஒலிகழலா னகனகருட்
பலிபெறுமுரசின் பண்புரைத்தன்று.

இ - ள். ஆரவாரிக்கும் வீரக்கழலினையுடையானது பரந்தமாளிகையிடத்துப் பலியைப்பெறும் முரசினுடைய தன்மையைச்சொல்லியது. எ - று.

வ - று. மதியேர் நெடுங்குடை மன்னர் பணிந்து
புதிய புரமாலை வேய - நிதியம்
வழங்குந் தடக்கையான் வான்றோய் நகருண்
முழங்கு மதிரு முரசு.

இ - ள். நிறைமதியொக்கும் உயர்ந்தகுடையினையுடைய அரசர் தாழ்ந்து புதிதானகீர்த்தித் தெரியலைச்சூட்டப் பொருளைப் பலர்க்குங்கொடுக்கும் பெரியகையினையுடைய அரசனது விண்ணைக்கிட்ட உயர்ந்த மாளிகையிடத்து இப்பொழுது ஆர்ப்பரவம் பண்ணுகின்றது, முன்பு பகையுள்ளகாலத்து இடிக்குமுரசு. எ - று.

மறக்களவழி:—

முழவுறழ் திணிதோளானை
யுழவனாக வுரைபெருந்தன்று.

இ - ள். முழவுபோலத்திரண்ட புயத்தினையுடையானை உழும்வேளாளனாக மிகுத்துச்சொல்லியது. எ - று.

வ - று. அஞ்சுவரு தானை யமரென்னு நீள்வயலுள்
வெஞ்சினம வித்திப் புகழ்விளைக்குஞ் - செஞ்சுடர்வேற்
பைங்கட் பணைத்தாட் பகட்டுழவ னல்கலா
னெங்கட் கடையா விடர்.

இ - ள் கண்டார்வெருவும் சேனையாகிய வரம்பையுடைய போர்க்களமென்னும் நீண்டசெறுவினுள் வெய்ய செற்றமென்னும் வித்தைவிதைத்துக் கீர்த்தியைவிளைக்கும் சிவந்தஒளிவேலாகிய கோலினையுடைய பச்செனறகண்ணினும் பெருத்த தாளினுஞ்சிறந்த யானையாகிய எருழவன் அளித்தலால் எம்போல்வார்க்கு வறுமையடையா. எ - று.

இது மாட்டேற்றில்லா உருவகம். பைங்கண் - பண்பு. (கு)

களவேள்வி:—

அடுதிற லணங்கார
விடுதிறலான் களம்வேட்டன்று.

இ - ள். கொல்லும்வலியினையுடைய பேய் வயிறாரவுண்ணப் பரந்தவலியினையுடையான் களவேள்வி வேட்டது. எ - று.

வ - று. பிடித்தாடி யன்ன பிறழ்பற்பே யாரக்
கொடித்தானை மன்னன் கொடுத்தான் - முடித்தலைத்
தோளொடு வீழ்ந்த தொடிக்கை துடுப்பாக
மூளையஞ் சோற்றை முகந்து.

இ - ள். [பலுவை]யொத்த பிறழ்ந்த எயிற்றினையுடைய பேயுண்ணக் கோடியினையுடைய சேனைமன்னவன் வழங்கினான்; மகுடத்தலையாகிய மிடாவில் தோளுடனே வெட்டுண்டுவீழ்ந்த தோள்வளையாற்சிறந்த கையே துடுப்பாக மூளையாகிய அழகியசோற்றைமுகந்து. எ - று. (சு)

முன்றேர்க்குரவை :—

வென்றேந்திய விறற்படையோன்
முன்றேர்க்க ணணங்காடின்று.

இ - ள். வென்றெடுத்த வெற்றியான்மிக்க ஆயுதத்தையுடையான் தேரின் முன் பேயாடியது. எ - று.

வ - று. உலவா வளஞ்செய்தா னூழிவாழ் கென்று
புலவாய புன்றலைப்பே யாடும் - கலவா
வரசதிர வாறி யடுகளம் வேட்டான்
முரசதிர வென்றதேர் முன்.

இ - ள். கெடாத நன்மையினைச்செய்தவன் நெடுங்காலம் வாழ்வானாகவென்சொல்லிப் புலானாறும் வாயினையும் புற்கென்ற தலையினையுமுடைய பேய் கூத்தாடும்; பொருந்தாதமன்னர் நடுங்கவெட்டிக் களவேள்விவேட்டான் முரசுமுழங்க வென்ற தேரின்முன்பு. எ - று.

முன் பேயாடும். (எ)

பின்றேர்க்குரவை :—

பெய்கழலான் றேரின்பின்
மொய்வளைவிறலியர் வயவரொடாடின்று.

இ - ள். இட்ட வீரக்கழலினையுடையான் தேரின்பின் செறிந்ததொடியினையுடைய பாணிச்சியர் வீரரோடு கூத்தாடியது. எ - று.

வ - று. வஞ்சமிலாக் கோலானை வாழ்த்தி வயவரு
மஞ்சொல் விறலியரு மாடுபவே - *வெஞ்சமரிற்
குன்றேர் மழகளிறுங் கூந்தற் பிடியும்போற்
பின்றேர்க் குரவை பிணைந்து.

இ - ள். பொய்யாத செங்கோலினையுடைய அரசனைத்துதித்து வெற்றியினையுடைய வீரரும் அழகியமொழியினையுடைய பாணிச்சியரும் கூத்தாடாநின்றார் வெவ்வியபூசலிடத்து; மலையையொக்கும் இளையயானையையும் கூந்தற்பிடியினையுமொப்பத் தேரின்பின் கைகோத்தாடும் கோப்பைக்கொண்டு. எ - று.

தும்பையின் முன்றேர்க்குரவை பின்றேர்க்குரவை, பொரச்செல்லும் தேரின்மேல்; இவை வென்றுநின்ற தேரின்மேல். (அ)

* வெஞ்சமத்தென்றும்பாடம்.

## பார்ப்பனவாகை :—

கேள்வியாற் சிறப்பெய்தியானை
வேள்வியான் விறன்மிகுத்தன்று.

**இ - ள். கேட்கக்கடவனகேட்டுத் தலைமைபெற்றவனை யாகத்தான்வெற்றி யைப்பெருக்கியது. எ - று.**

வ - று. ஓதங் கரைதவழ்நீர் வேலி யுலகினுள்
வேதங் கரைகண்டான் வீற்றிருக்கு - மேதகுஞ்
சுடுசுடர் தானாகிச் சொல்லவே வீழ்ந்த
விடுசுடர் வேள்வி யகத்து.

**இ - ள். திரை கரைமீதே தத்தும் கடலேவேலியாகவுடைய நிலத்திடத்து நான்குவேதத்தினையுங்கற்றவன் தாபதவர்க்கரசாய்ச் செம்மாந்திருக்கும்; குற்றத்தைச்சுடும் நெருப்புத்தானாகி எல்லாரும்போற்ற விரும்பின பரந்த அனலையுடைய யாகத்திடத்து. எ - று.**

**வேள்வியகத்து வீற்றிருக்குமென்க.** (௯)

## வாணிகவாகை :—

செறுதொழிலிற் சேணீங்கியா
னறுதொழிலு மெடுத்துரைத்தன்று.

**இ - ள். பொல்லாத வினையினின்றும் நீளக்கழிந்தவனுடைய ஆறுசெய்தியும் உயர்த்திச் சொல்லியது. எ - று.**

வ - று. உழுது பயன்கொண் டொலிநிரை யோம்பிப்
பழுதிலாப் பண்டம் பகர்ந்து - முழுதுணர
வோதி *யழல்வழிபட் டோம்பாத வீகையா
னாதி வணிகர்க் கரசு.

**இ - ள். உழுது அதன்பலத்தைக்கைப்பற்றி ஆரவாரிக்கும் ஆனிரையைப் பாதுகாத்துக் குற்றமில்லாத கூலங்களையும் விற்று நான்மறை முதலாயினபலவும் அறியக்கற்று முத்தீயை ஆராதித்துப பொருளைச் சீர்தூக்காதுகொடுக்கும் கொடையினையுடையான் முதல்வணிகர் எல்லார்க்கும் வேந்து. எ - று.** (௧௦)

## வேளாண்வாகை :—

மேன்மூவரு மனம்புகல
வாய்மையான் வழிமொழிந்தன்று.

**இ - ள். முற்பட்ட அந்தணர் அரசர் வணிகரென்னு மூவரும் நெஞ்சுவிரும்ப மெய்மையால் அவரவர் ஏவல்வழியேசென்றது. எ - று.**

---

* **அழல்வழிவேட்டென்றும் பாடம்.**

வ - று. மூவரு நெஞ்சமர முற்றி யவரவ
ரேவ லெதிர்கொண்டு மீண்டுமையா - னேவல்
வழுவான் வழிநின்று வண்டார் வயலு
ளுழுவா னுலகுக் குயிர்.

இ - ள். முன்சொன்னமூவரும் மனமேவ முதிர்ந்து அவர்தாந்தாம் ஏவின காரியத்தை ஏற்றுக்கொண்டு மீண்டும் மறுத்துச்சொல்லான் தனக்கு நீதிநூல் ஏவினசொல்வழுவானாய் முறையேநின்று சுரும்புநிறையும் கழனியுள் உழுமவன், பூமியிலுள்ளார்க்கெல்லாம் உயிரையனையவன். எ - று. (கக)

## பொருநவாகை :—

புகழொடு பெருமை நோக்கி யாரையு
மிகழ்த லோம்பென வெடுத்துரைத் தன்று.

இ - ள் கீர்த்தியோடு மிகுதியைப்பார்த்து யாவரையும் என்றுதலைப் பரிகரியென்று உயர்த்திச்சொல்லியது. எ - று.

வ - று. வெள்ளம்போற் றானை வியந்து விரவாரை
யெள்ளி யுணர்த லியல்பன்று - தெள்ளியா
ராறுமே லாறியபி னன்றித்தங் கைக்கொள்ளார்
நீறுமேற் பூத்த நெருப்பு.

இ - ள். கடல்போன்ற சேனையினையுடையேம்யாமென்றுமதித்துப் பகைவரை இகழ்ந்து அறியுமது தன்மையன்று, தெண்மையுடையார்; வெம்மையாறுமாயின் ஆறியபின்அல்லது தங்கள்கையில் ஏந்தார், பொடிமூடியதழலே. எ - று.

## அறிவன்வாகை :—

புகழ்நுவல முக்காலமு
நிகழ்பறிபவ னியல்புரைத்தன்று.

இ - ள். தன்கீர்த்தியைச்சொல்ல மூன்றுகால நிகழ்ச்சியையும் அறியுமவன் தன்மையைச்சொல்லியது. எ - று.

வ - று. இம்மூ வுலகி னிருள்கடியு மாய்கதிர்போ
லம்மூன்று முற்ற வறிதலாற் - றம்மி
னுறழா மயங்கி யுறழினு மென்றும்
பிறழா பெரியோர்வாய்ச் சொல்.

இ - ள். நாகலோகம் பூலோகம் சுவர்க்கலோகமென்னும் மூன்றுலோகத்தினுமுள்ள அந்தகாரத்தைப் போக்கும் அழகிய ஆதித்தனையொப்ப இறப்பு நிகழ்பு எதிர்வென்னும் மூன்றுகாலத்தையும் முடியஅறிதலால் தம்மில் தாம் மாறுபடாதன மாறுபட்டுப் பால்புளித்துப் பகலிருண்டு மாறுபடினும் எக்காலத்தினும்தப்பா, சான்றோர்மெய்ம்மொழி. எ - று.

ஒருபாற்கிளவி ஏனைப்பாற்கண்ணும் வரும். (கஉ)

### தாபதவாகை:—

தாபத முனிவர் தவத்தொடு முயங்கி
யோவுத லறியா வொழுக்குரைத் தன்று.

**இ - ள். தபோதனவேடத்தர் புண்ணியத்தோடுதழுவி ஒழிதலுணராத நடையைச்சொல்லியது. எ - று,**

வ - று. நீர்பலகான் மூழ்கி நிலத்தசைஇத் தோலுடையார்
சோர்சடை தாழச் சுடரோம்பி - யூரடையார்
கானகத்த கொண்டு கடவுள் விருந்தோம்பல்
வானகத் துய்க்கும் வழி.

**இ - ள். நீரிலேபலகாலுமுழுகி வெறுநிலத்துச்சாய்ந்து மான்றோலைப்புடைவையாகவுடுத்து நெகிழ்ந்தசடைவீழத் தீயைப் பரிகரித்துப் பதியிடத்து அணையாராய்க் காட்டிலுள்ள சாகமூலபலங்களைக்கைப்பற்றித் தெய்வத்தினையும் விருந்தினையும்போற்றுமது, சுவர்க்கத்துத் தம்மைச்செலுத்துநெறி எ - று.** (கச)

### கூதிர்ப்பாசறை:—

கூற்றனையான் வியன்கட்டூர்க் கூதிர்வான் றுளிவழங்க
வாற்றாமை நனிபெருகவு பயில்வேலோ னளிதுறந் தன்று.

**இ - ள். கூற்றையொத்தவனுடைய அகறைபாசறையிடத்துக் கூதிர்க்காலத்துமேகம் உறையைக்கொடுப்பப் பிரிவாற்றாமை மேன்மேன்மிகவும் கூரிய எஃகினையுடையான் கருணையை ஒழிந்தது. எ - று.**

வ - று. கவலை மறுகிற் கடுங்கண் மறவ
ருவலைசெய் கூரை யொடுங்கத் - துவலைசெய்
கூதிர் நலியவு முள்ளான் கொடிதேரான்
மூதின் மடவாண் முயக்கு.

**இ - ள். கவர்த்ததெருவிடத்துத் தறுகண்வீரர் தழையாற்பண்ணின கூரையிடத்திலேயடங்கச் சிறுதுளியைப்பண்ணும் கூதிர்க்காலம் வருத்தவும் வினையான், பதாகையாற்பொலிந்த தேரினையுடையான்; பழையமனையில் மனைக்கிழத்திபுணர்தலை., எ - று.** (கரு)

### வாடைப்பாசறை:—

வெந்திறலான் வியன்பாசறை வேல்வயவர் விதிர்ப்பெய்த
வந்துலாய்த் துயர்செய்யும் வாடையது மலிபுரைத்தன்று.

**இ - ள். வெய்ய வலியினையுடையானது பரந்த[வீடாரத்து]வேல்வீரர்நடுக்கமுற வந்தியங்கி வருத்தம்பண்ணும் வாடைக்காற்றின் மிகுதியைச்சொல்லியது. எ - று.**

வ - று. வாடை நலிய வடிக்கணு *டோணசை
யோடை மழகளிற்ரு னுள்ளான்கொல் - கோடன்

---

*** தோணிலை யென்றும் பாடம்.**

முகையோ டலம்வா முற்றெரிபோற் பொங்கிப்
பகையோடு பாசறையு ளான்.

இ - ள். வாடைக்காற்றுவருத்த மாவடுப்போன்ற கண்ணுளுடைய தோளை நச்சுதல் பட்டத்தையுடைய இளவாரணத்தான் நினையான்போலும்; காந்தண்முதல் மொட்டுடனே சுழல முதிர்ந்தநெருப்புப்போற்கோபித்துச் சத்துருக்கள்கெட்டோடும் பாடிவீட்டிலிருந்தான். எ - று.

பாசறையுளான் உள்ளான்கொலென்க. (கசு)

## அரசமுல்லை :—.

செருமுனை யுடற்றுஞ் செஞ்சுடர், நெடுவே
லிருநிலங் காவல னியல்புரைத் தன்று.

இ - ள். பொரும்பகையைவருத்தும் சிவந்த சோதியாற்பொலிந்த நெடிய வேலினையுடைய பெரிய புவியைக்காக்கும் அரசன்றன்மையைச்சொல்லியது. எ - று.

வ - று. செயிர்க்க ணிகழா து செங்கோ லுயரி
மயிர்க்கண் முரச முழங்க - வுயிர்க்கெல்லா
நாவ லகலிடத்து ஞாயி றனையனுய்க்
காவலன் சேறல் கடன்.

இ - ள். குற்றத்திடத்துச்செல்லாதே மனுநீதியை உயர்த்து மயிரான்மிக்க கண்ணினையுடைய வீரமுரசொலிப்ப எல்லாவுயிர்க்கும் நாவலந்தீவின்கண் ஆதித்தனையொத்து வேந்தன்நடத்தல் முறைமை. எ - று.

முல்லை - இயல்புமிகுதி. (கஎ)

## பார்ப்பனமுல்லை :

கான்மலியு நறுந்தெரியற் கழல்வேந்த ரிகலவிக்கு
நான்மறையோ னலம்பெருகு நடுவுநிலை யுரைத்தன்று.

இ - ள். செவ்விமிக்க நறுநாற்றஞ்செறிந்த மாலையினையுடைய வீரக்கழலாற் பொலிந்த மன்னர் மாறுபாட்டைக்கெடுக்கும் நான்குவேதத்தினையுடையோன்நன்மைமிக்கசெப்பமுறைமையைச் சொல்லியது. எ - று.

வ - று. ஒல்லெனீர் ஞாலத் துணர்வோ விழுமிதே
நல்லிசை முச்செந்தீ நான்மறையோன் - செல்லவும்
வென்றன்றி மீளா விறல்வேந்தர் வெம்பகை
யென்றன்றி மீண்ட திலர்.

இ - ள். அநுகரண வோசையையுடைய கடல்சூழ்ந்த வையகத்து அறிவு சாலச் சீரிதாகவிருந்தது; அழகிய புகழினையும் மூன்றுசெந்தீயினையும் நான்குவேதத்தினையுமுடையோன் சந்துவேண்டிச்சென்றுனைப் பகைமேலெடுத்துச்சென்றால் வென்றல்லதுமீளாத வெற்றிமன்னர் வெய்யமுரணென்றல்லது பொருந்தி மீண்டதிலர். எ - று. (கஅ)

அவையமுல்லை :—

நவைநீங்க நடுவுகூறு
மவைமாந்த ரியல்புரைத்தன்று.

இ - ள். குற்றங்கெட நடுவுசொல்லும் அவைக்களத்துச் சான்றோர்தன்மையைச்சொல்லியது. எ - று.

வ - று. தொடைவிடை யூழாத் தொடைவிடை துன்னித்
தொடைவிடை யூழிவை தோலாத் - தொடைவேட்
டழிபட லாற்ற லறிமுறையே னெட்டின்
வழியடாதல் வல்ல தவை.

இ - ள். * அனுயோகமும் உத்தரமும் முறைமையாக அனுயோகத்தையும் உத்தரத்தையும் புத்திபண்ணித் †தொடையும் விடையும் முறைமையும் என்றிவைதப்பாத சயபத்திரத்தைவிரும்பித் தோல்வியும் வெற்றியும் தெரியாலே நிச்சயிக்குமுறைமையை மேற்கொண்டு எட்டின் நெறியே செல்லவல்லது, அவைக்களம். எ - று.

எட்டாவன : "குடிப்பிறப்புக் கல்வி குணம்வாய்மை தூய்மை, நடுச்சொல்லு நல்லணி யாக்கம் - கெடுக்கு, மழுக்கா றவாவின்மை யவ்விரண்டோ டெட்டு, மிழுக்கா வவையின்க ணெட்டு" என்பதனானறிக. (கக)

கணிவன்முல்லை :—

துணிபுணருந் தொல்கேள்விக்
கணிவனது புகழ்கிளந்தன்று.

இ - ள். நிச்சயித்தும் பலவுமறியும் பழைய கேள்விஞானத்தினையுடைய சோதிடநூல்வல்லவனது கீர்த்தியைச் சொல்லியது. எ - று.

வ - று. புரிவின்றி யாக்கைபோற் போற்றுவ போற்றிப்
பரிவின்றிப் பட்டாங் கறியத் - திரிவின்றி
விண்ணிவ் வுலகம் விளைக்கும் விளைவெல்லாங்
கண்ணி யுரைப்பான் கணி.

இ - ள். தப்பாதபடி தன்னுடம்புபோலே பரிகரிக்கக்கடவநூல்களைப் பலகாலுங்கற்று அடிப்படுத்தித் துன்பமின்றி உண்மையுணரத் தப்பின்றிச் சுவர்க்கம் இப்புவிஉண்டாக்கு நிகழ்ச்சியெல்லாம் கருதிச்சொல்லுமவன் சோதிடவன். எ - று.

மூதின்முல்லை :—

அடல்வே லாடவர்க் கன்றியு மவ்வின்
மடவான் மகளிர்க்கு மறமிகுத் தன்று.

---

* அனுயோகம் - வினா. அபியோகமென்று எல்லாப்பிரதிகளிலு முள்ளது.
† தொடை - ஆக்ஷேபம்.

இ - ள். கொல்லும் வேலினையுடைய வீரர்க்கல்லது அந்தமறக்குடியில் மடப்பத்தினையுடைய அரிவைமார்க்கும் சினத்தைச்சிறப்பித்தது. எ - று.

வ - று. வந்த படைநோனாள் வாயின் முலைபறித்து
வெந்திற லெஃக மிறைக்கொளீஇ - முந்தை
முதல்வர்கற் றான்காட்டி மூதின் மடவாள்
புதல்வனைச் செல்கென்றாள் போர்க்கு.

இ - ள். தங்கள்மேல் எடுத்துவந்த சேனையைப்பொறாளாய்ப் பின்னைவாயின முலையைவாங்கி வெவ்விய வெற்றியினையுடையவேலை முன்பு பகைவனைக்குத்தி வனைந்த வளைவுதவிர்த்து முன்பு தன்வழியினுள்ளோர்நடுகல்லைத் தான்அவனுக்குக் காட்டிப் பழைய மறக்குடியிற் பேதையானவள் பூசலுக்குப் பிள்ளையைப் போவாயாகவென்றுசொன்னாள். எ - று.

இறைக்கொளீஇ - கையிலேகொடுத்தென்றுமாம். (உக)

ஏறாண்முல்லை:—

மாறின்றி மனங்கனலு
மேறாண்குடி யெடுத்துரைத்தன்று.

இ - ள். எதிரின்றியேயொழியச் சினமிகும்மேன்மேலேறாநின்ற ஆண்மைத் தன்மையினையுடைய குடியொழுக்கத்தினை உயர்த்துச்சொல்லியது. எ - று.

வ - று. கன்னின்றா னெந்தை கணவன் களப்பட்டான்
முன்னின்று மொய்யவிந்தா ரென்னையர் - பின்னின்று
கைபோய்க் கணையுதைப்பக் காவலன்மே லோடி
யெய்போற் கிடந்தானென் னேறு.

இ - ள். கல்லிலேபொருந்திநின்றான் என்தகப்பன்; என்கணவன் போர்க்களரியிலேபட்டான்; பகைவர் முன்னேநின்று எதிர்த்துப் பூசலிலேவீழ்ந்தார் என்தமையன்மார்; தன்சேனைகெடவும் கெடாதே பின்னேநின்று தன்கைசென்று அம்பைச்செலுத்தப் பகையரசன் மேலேசென்று எய்ப்பன்றிபோலே பட்டுக்கிடந்தான் என்னுடைய புதல்வன். எ - று. (உஉ)

வல்லாண்முல்லை:—

இல்லும் பதியு மியல்புங் கூறி
நல்லாண் மையை நலமிகுத் தன்று.

இ - ள். இல்லையும் ஊரையும் இயல்பினையுஞ்சொல்லி அழகிய ஆண்மைத் தன்மையை நன்மைபெருகச் சொல்லியது. எ - று.

வ - று. வின்முன் கணைதெரியும் வேட்டைச் சிறுசிறார்
முன்முன் முயலுகளு முன்றிற்றே - மன்முன்
வரைமார்பின் வேன்மூழ்க வாளழுவந் தாங்கி
யுரைமாலை சூடினா னூர்.

